உ

கடவுள் துணை.

நாற்பத்தெண்பெயர்களில் மகாமகுத்துவம்பொருந்திய

இராமதேவர் அருளிச்செய்த

# சிவயோகம் - உ௱.

இஃது

தஞ்சாவூர் மகாராஜா சமஸ்தானத்துவயித்தியர்

ம-௱-ஸ்ரீ

காதர்சாகிபு

கரையாங்குட்டைஆயுள்வேதபண்டிதர்

இலட்சுமண நாயகர்

இவர்கள்முன்னிலையில்

மதுரை புதுவை சென்னை இம்முச்சங்கங்களில்

தமிழ்த்தலைமைப்புலமைநடாத்திய

களத்தூர்

வேதகிரிமுதலியார் குமாரன்

ஆயுள்வேதபாஸ்கரன்

கந்தசாமிமுதலியாரவர்களால்

முன்பதிப்பித்த பிரதிக்கிணங்க

பரிசோதித்து

புரசபாக்கம்

ஏழுமலைப்பிள்ளையவர்களது

விவேகவிளக்க அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

யுவ ௵.





# இராமதேவர்

# சிவயோகம் - உ௱



## குருவணக்கம்.

மூலமெனுமுகப்பொருளாமுக்திரமவேணையில்
மூதண்டமானதொருபிரம்மத்துக்கப்பால்
ஞாலமெனுந்தலமுடையசத்திபதிமேலே
நாதாந்தப்பெருவெளியினடுவெளியின்மேலே
மேலிருநெருப்பாறுமயிர்ப்பாலத்தப்பால்
நிறைந்தபரிபூரணமாய்நிஷ்களமதாகிச்
சீலமிருந்தவருடையோரிருதயமேதானாய்ச்
சிறந்துநின்றபரமகுருசீர்பாதந்துணையே. (௧)

## வாசிமார்க்கநிலை.

பாதமெனும்வாசிதனையறியவேண்டி
பத்தியுடன்மனோன்மணியைக்கண்டுபோற்றி
வேதமெனும்பொருளறியவேண்டுமென்று
வேண்டிடினுந்தாந்தவேதந்தாயும்
நீதமுடன்வாராமதேவாவென்று
நிலைநிறுத்திமதியமுதம்நினைவாயீந்தாள்
போதமிகுமதியமுர்தங்கொண்டபோது
புத்தியுடன்பூசைவிதிபுகலலுற்றேமனே. (௨)

புகலென்றயோகமனோன்மணிதான்வந்து
பூரணமாய்மதியமுதம்புகட்டிநாள்கால்
அகமென்றவகமதாவுமுத்தியாச்சு
வம்பரத்தின்றரிசனமுமடுக்கலாச்சு
செகமென்றசிவமயமுந்தெளியலாச்சு
தேவாதிதேவனென்றபேருமாச்சு
சுகமென்றபூசைவிதிதன்னிலந்தச்
சுத்தமுள்ளசத்தியைநான்றொழுதேன்பாரே. (௩)

தொழுதமுறையெல்லாமென்றுஞ்சத்திபூசைச்
சுருக்கமுடன்சொல்லுகிறேனன்றாய்க்கேளு
பழுதொன்றுமில்லாதஅகாரதீட்சைப்
பத்திகொண்டுமண்டலமேசெபித்தாயாகில்
அழுத்தமென்றதேகமதுசித்தியாச்சு
ஆகாரவக்கையுதப்பிறிவோயில்லை

ஜெழுத்தருள்ளசத்தியென்றதேகந்தானும்
நிலைத்தபின்புஉயிர்சிவத்துக்குறுதிகேளே

உறுதியென்றசத்தியடாவுகாரதிட்சை
உள்ளுணர்ந்துமல்லடலமேசெபித்தாயாகிற்
பறுதியென்றவாசியதுக்குறுதியாச்சு
பாலகனேவாசியென்றுலுயிர்தானப்பா
கருதுகின்றவுட்டலுயிர்தானிலைத்துதானுல்
காரணமாய்ச்சித்துவெகுவாடலாகும்
சுருதிபொருளானதொருகுருவைக்காணச்
சொல்லுகிறேம்பூசைவிதிடன்றுய்க்காணே.

காணுதற்குமணமென்றமகாரபீடங்
கருணையுள்ளவட்டமடாவிந்துவிந்து
ஊணுதற்குமகாரமென்றவிந்துதன்னை
உற்றுப்பாரோங்காரக்கம்பமாகிப்
பேணுதற்குக்கம்பநுனிமேலேயையா
போரண்டமானதொருவன்னி வன்னி
தோணுதற்குவன்னியென்றுலாயிரத்தெண்மலர்க்குள்
தொடுறுதிபோலமூர்தமதற்குள்ளேபாரோ.

உள்ளானமதியமூர்த்தந்தன்னைமைந்தா
ஒருபோதுபலைவிடைதானுள்ளேகொண்டால்
விள்ளானதேகமதற்கழிவோயில்லை
வினையானமுத்தேகமுத்தியாச்சு
கொள்ளாயுமந்திரமுஞ்சித்தியாச்சு
குருசுருதிமுடிவுபொருள்காணலாச்சு
தள்ளாதவஷ்டகம்மசித்தியாச்சுத்
தாயானசத்தியிடபூசைகேளே.

பூசைவிதிசக்கரம்.

கோளப்பாபூசைவிதிச்சக்கரஞ்சொல்வேன்
கிருபையுள்ளசக்கரந்தான்விந்துவிந்து
ஆளப்பாவிந்தென்றவளையத்துள்ளே
அருள்பெருகுமோங்காரமதனுட்போடு
நாப்பாவோங்காரமதனுட்டானும்
நடுமையமானசுழியதனுட்போடு
தேளப்பாகொட்டுதல்போற்சக்கரமுமாச்சுச்
சிவாயகுருசக்கரத்துக்கின்னங்கேளே.
இன்னங்கேள்விந்துவென்றவளையத்தில்கே
ரவிமதிசுழினையென்றவளையப்போடு

பன்னமென்றமுதல்வளையமிதழ்காணெட்டு
மறுவளையம்பதினாறுமதின்மேலப்பா
சொன்னதோர்முப்பத்திரண்டுபோடு
துருவமுள்ளவிதழன்பத்தாறுமாச்சு
பின்னமில்லாக்கோட்டைநால்வாசலிட்டு
விலாசமுள்ளதேவதையைவிள்ளக்கேளே. (௯)

## பூசைசெய்யுமார்க்கம்.

கேளப்பாமேல்வாசல்பிர்மபீசன்
கெணிதமுள்ளகீழ்வாசல்மாலின்பீசம்
வாளப்பாவடவாசல்ருத்திரபீசம்
வளமானதென்வாசல்மயேசன்பீசம்
வேளப்பாசதாசிவன்போலிருந்துகொண்டு
மேற்றிசையைநோக்கிச்சக்கரத்தைவைத்து
நாளப்பாதினம்பார்த்துப்பூசைசெய்ய
நல்லநாள்நினைத்தநாள்நன்மையாமே. (௰)

நன்மையுடன்பூசைசெய்யமைந்தாகேளு
நலமாகச்சுகாசனமாயிருந்துகொண்டு
உண்மையுடன்விபூதியையுந்தளமாய்ப்பூசி
உரிமையுளளமேருவைமுன்னிறுத்திக்கொண்டு
தன்மையுடன்பலகாரம்ரசவர்க்கங்கள்
சந்தனதாம்பூலமுடன்றயவாய்வைத்து
செம்மையுடன்தானிருந்துதியானம்பண்ணிச்
சிவமானபாத்திரங்கைதன்னில்வேண்டே. (௰௧)

வேண்டியதோர்பாத்திரங்களனந்தமுண்டு
விசையொடுங்கும்பாத்திரந்தானார்தான்காண்பார்
ஆண்டவனமுதெடுத்துவுண்டானையா
அதின்பிறகுசத்திமதுயமுதமுண்டாள்
தாண்டவத்திற்றில்லைநடமாடும்போது
சங்கரனார்நஞ்சமுதந்தானேகொண்டார்
காண்டமென்றகமண்டலந்தான்கபாலபீடங்
கயிலாசமேருவென்றபீடந்தானே. (௰௨)

தானென்றபீடமென்றுங்கபாலமென்றுஞ்
சங்கையுள்ளசத்தியென்றும்பாத்திரமென்றும
மானென்றமந்திரத்தின்பீடமென்றும்
மகாசத்தியானபாத்திரந்தானென்றும்
தேனென்றபாத்திரத்தின்பெருமைசொல்லச்
சிவனாலுமுடியாதுதேவிசத்து

கோவென்றகுருவருளால்சொல்லக்கேளு
கொடிமுடியாந்தங்கமென்றபாத்ரந்தானே.

பாத்திரத்தைத்தானறிந்துபத்தியாகப்
பத்திகொண்டுயிடக்கரத்தில்வலக்கரத்தாற்பற்றி
நேத்திரன்பாகமதாய்க்குடத்தைவாங்கி
நேர்மையுடன்றான்றுலங்கியமதுவைப்பூரிக்
கோத்திரத்தின்குருவருளால்சிவ்வெனவேவாங்கிக்
குருவானபதிநோக்கிஅம்மெனவேபூசி
மாத்திரைதான்மயங்காமல்ரேசகபூரகமாய்
மனதுறாக்கும்பகத்தில்வாசிதனைப்பூட்டே

வாசிதனைப்பூட்டியோர்மாத்திரையதின்மேல்
மார்க்கமுடன்கறிவர்க்கவகையருந்தி
நேசமுடன்றூபமேற்றியமைத்து
நினைவாய்த்தூபஞ்சாத்திருட்செலுத்திப்
பாசமுடன்பதியறிந்தப்பரிவில்நின்றும்
பரமகுருதீபவொளிபளீலெனவேதோன்றும்
வாசிமுனைமீதில்குருநாதனடிவாழும்.
நாதாந்தப்பேரொளியினன்மைபோலாமே.

ஆமப்பாசிவாயகுருசக்ரத்தைநமைந்தா
ஆருக்குஞ்சொல்லாதேதையயாவையா
வாமப்பால்மதியமுதாகமறிந்தோர்க்கீவாய்
மதியறியார்க்கிந்ததிறல்வளமாங்கேளு
தாமப்பாஅன்றுடலைத்தானேகண்டு
தன்மையுடன்சிவாயகுருசக்ரத்தைவைத்து
நாமப்பாவென்றமொழிதனைநிறுத்திப்பூசை
நன்றாகப்பூசிக்கநன்மைபெறலாமே.

பூசையில்கூடும்பெயர்கள்.

நன்மையுள்ளபூசையிலேமைந்தாமைந்தா
நானீயுமல்லாதுவேறேவேண்டாம்
உண்மையுள்ளபெரியோர்கள்வந்தாற்சேரு
முலகமதிற்பலகூட்டமாகாவாகா
தன்மையுள்ளசற்குருவின்பாதந்தன்னைத்
தாரணியிலறியாதார்கோடாகோடி
வன்மைபெறச்சாஸ்திரத்தைப்பாடம்பண்ணி
வசனிப்பார்தெரிந்தவர்போல்மைந்தாபாரே.
பாரப்பாபயனறியார்கோடாகோடிப்
பலநூலும்பார்த்துமறியாதார்கோடி

நேரப்பாநிலையறிந்து நில்லார்கோடி
  நிட்டேமானமன முடையோர்கோடி
வீரப்பாகொண்டுமன தறியார்கோடி
  வேசையின்மேலாசைகொண்டவிலார்கோடி
காரப்பாலகிரிகொண்டுலகிரிதனையறியார்
  காசினியில்மெத்தவுண்டுகண்டுதேறே. (௰௮)

தேறுதசித்தரிடம்பேசவேண்டாம்
  ஜெபதபங்களறியாரைச்சேர்க்கவேண்டாம்
கூறுதசொற்களைததான்கூவிக்கூவிக்
  குணமறியான்மனமறியான்குருட்டுமாடு
போராசைத்தான்பிடித்துப்பேய்போலோடிப்
  பேய்க்கூற்றாய்த்திரிவாரையடுக்கவேண்டாம்
ஆறானதில்லறமேசத்தியென்று
  அமர்ந்திருப்பான்கோடியினிலொருவன்றானே. (௰௯)

ஒருவனாகோடியிலேயொருவனுண்டு
  உலகத்தோடொத்துமன தறிவாய்நிற்பான்
சிறுவனாவறமையிலேசென்றேநிற்பான்
  சித்துமிகுத்துடையவன்றானவனேயாகுங்
குருமொழியைமறவாதான்குருவேயாகுங்
  குண்டலியினந்தியொளிகூறுவான்பார
றாவிருந்தப்பதியறிந்துவாலைபூசை
  செவ்வையாய்ச்செய்தவனேசித்தனாமே. (௨௰)

மானதவாலைபூசை.

சித்தமென்றபெரியோர்கள்பூசைமாகம்
  செப்பினாவெகுசோலியாகமைந்தா
பக்திகொண்டுபூசைவிதிவளாய்ச்சொன்னேன்
  பக்குவத்தைச்சித்தர்கள்தானறிந்துகொண்டு
சுந்தமுடன்சூட்சமதாய்வாலைபூசைச்
  சொன்னவன்றான்மேவனடாவென்றுபேசிப்
புத்தியுடன்கண்டவர்தானடக்கம்பண்ணிப்
  பூரணமாங்குகைதனிலேவைத்திட்டாரே. (௨௧)

வைத்திட்டவிதங்கண்டுநான்தான்சென்று
  மலைதோறுஞ்சித்தரிடங்கண்டுபேசிக்
கைத்திட்டமானதொருவாலைபூசைக்
  கருவான நூல்வாங்கிநல்லோர்க்கீய்ந்தேன்
பொய்த்திட்டமனதோர்க்குயிந்நூல்கிட்டிப்
  பூரணமாய்நன்மனதால்நிம்பானப்பா

மெய்த்திட்டமானதொருராமவாக்யம்
  மேலானவாக்யமென்றுபணிந்திட்டாரே.

பணிந்திட்டமானதமாவாலைப்பூசைப்
  பக்குவத்தைச்சொல்லுகிறேன்பண்புள்ளோர்க்குக்
கணிந்திட்டமனதானகனிவால்மைந்தா
  கருணையுள்ளபூரணத்தைக்கருத்திலேந்தி
அணிந்திட்டரேசகந்தால்கும்பகத்தைப்பற்றி
  அப்பனேபூரணத்தைப்பூரிப்பூரி
தணிந்திட்டமூலமதில்வாசிகொண்டு
  தாளிருத்தித்தீபவொளிதான்தாணுமே.

ஆமப்பாமானதமாம்பூசைதன்னை
  ஆர்செய்வார்சித்தாதிசித்தன்செய்வான்
காமப்பால்மதமீறிநேசமுற்றக்
  கன்மிகள்தான்செய்தாக்காலழிந்துபோவான்
வாமப்பால்வாமத்தைமகிழார்தன்னை
  மகத்தானகுருவென்றேமகிழ்ந்துநில்லு
தானப்பாதன்தேகஞ்சுத்திபண்ணிச்
  சதாசிவன்மேல்சிந்தையதாய்த்தானேநில்லே.

நில்லென்றலகிரியிலேயந்தமுண்டு
  நேர்மையுள்ளலகிரியட்டாநாதம்நாதம்
சொல்லென்றால்வெளிதோன்றச்சொல்லலாகா
  சொல்லற்றமவுனமதாயிருக்கவேண்டும்
வில்லென்றவிசையுடையமனத்தோர்க்கையா
  விளம்புகிறேன்ரகசியமாய்விளம்புறேன்யான்
கள்ளென்றலகிரியொன்றுகஞ்சாவொன்று
  கனமானமந்திரமாஞ்சாரக்கதொன்றே.

ஒன்றானபூரணமாமாதிவஸ்து
  ஓகோகோவிதுநாலும்பிர்மகம்பம்
நன்றாகநாலினிடவிபரங்கேளு
  நலமானவாரணிக்கிம்மூலிகைதான்பெரிது
நின்றுமூலிகைக்குமந்திரந்தான்பெரிது
  நேர்மையுள்ளமந்திரத்துக்கதிகங்கேளு
குன்றுதபூரணமாமாதியாதி
  குருவானவாதிவஸ்துக்கதிகங்காணே.

காணுதபூரணமாம்வஸ்துதன்னைக்
  காசினியிலாரறியப்போறாரையா

பணும்மலுகைத்தோர்மாண்டுபோனூர்
பிரமாணவஸ்துவதாயேகவிந்து
தோணுதசத்தமட்டாதெரிக்கும்வஸ்து
துருவமுள்ளமேருவட்டாவண்டவஸ்து
பூணுதபொருளுடையபூரணமாம்வஸ்து
பூரணமாய்நின்றிலங்கும்பூரணமதாமே. (௨௭)

வாரணிகுணம்.

தாசப்பாதாயினிடபருவஞ்சொன்னேன்
பன்மையுடன்பூசிக்கக்காலங்கேளு
நாடப்பாசொல்லுகிறேனுதயகாலம்
நன்றாகவாரணியைப்பிறக்கிமைந்தா
வர்டப்பால்மதியானவமுர்தமென்று
வளைக்கமுட்டன்பாலதனைகையிற்கொண்டு
காமப்பால்தனக்குமொருசுத்திகேளு
கனிவானமுப்பழமுமிதற்காட்பாரே. (௨௮)

பாசப்பாபழமறிந்துப்பாலைக்கொள்ள
பருவமுள்ளவாலைத்தாய்பாதங்காணும்
நேரப்பாநின்றவளுமகனேயென்று
நினைவாகச்சரிதைவழிநன்றாய்ச்சொல்லி
காரப்பாசரிதைவழிநன்றாய்க்காத்தால்
கனமானசாலோகபதவிகாணும்
ஆரப்பாவறியார்கள்சாலோகபதவி
யாகராவப்பதவிமுத்தியாமே. (௨௯)

முத்தியுள்ளவாரணியின்குணத்தைச்சொன்னேன்
மூர்க்கமுடன்பூசிக்கக்காலஞ்சொன்லேன்
சித்திபெறமூலியொடுதியானஞ்சொன்னேன்
சிவசிவாமுப்பதவித்திறமுஞ்சொன்னேன்
புத்தியுள்ளநாதாக்கள்மறைப்புஞ்சொன்னேன்
பூரணமாய்நின்றிலங்கும்வாசிசொன்னேன்
பத்திகொண்டுநின்றவர்க்குப்பலிக்குஞ்சித்தி
பலியாதுநினைவறியாப்பாவிம்மாரே. (௩௰)

மாரானமூலிகையைவாங்கிமைந்தா
வளைக்கமுடன்விளாக்காயபிதுக்கிநன்றாய்
நேராளநேரமட்டாவுச்சிநேரம்
நேர்மையுள்ளமூலிகையையரைத்துக்கொண்டு
சீராகமதியமதிற்பூசைசெய்யத்
குளமாகச்சக்கரையைக்கலந்துக்கொண்டு

# இராமதேவர் சிவயோகம் ௨௱.

சீராகமதியமதிற்பூசைசெய்யத்
தேவியெனும்புலனைசதுர்த்தீர்க்கமாமே.

## மூலிகைக்குணம்.

தீர்க்கமுள்ளபுலனையவள்முன்னேநின்று
செவ்வையுடனென்மகனேசெப்பக்கேளு
மார்க்கமுள்ளமூலிகைக்குகிரியைசித்தி
மகத்தானகிரிகையிலேமனதுதோய்ந்தால்
ஆர்க்குமிங்கில்லாதவுறவேதங்கும்
அந்தரியுஞ்சாமீபவுறவைக்காட்டும்
பார்க்கின்றப்பலமையநூலைப்பார்க்கப்
பத்திகொண்டுநின்றறிவுபதியுந்தானே.

தானென்றமூலிகையின்விபரஞ்சொன்னேன்
தாயானமனோன்மணிதன்றயவத்தினாலே
தேனென்றமந்திரமாமூர்த்தந்தன்னைத்
தெகட்டாதவமுர்தமதைத்தெளிவாய்வாங்கி
பாரொன்றபாலமுர்தந்தனைக்குமைந்தா
பகருவமாந்தத்தனைப்பகரக்கேளு
கோவென்றபாத்திரந்தான்சக்திசத்திக்
குருவானபாத்திரத்தைக்கரத்தில்வேண்டே.

## மந்திரத்தின்குணம்,

வேண்டியபாத்திரத்திலமுர்தம்விட்டு
விபரமுடன்மாலைபிடிபூசைபண்ணி
ஆண்டவனைப்பதநோக்கித்தியானஞ்செய்து
அருள்பெருகவர்க்கவகையமுதுகொண்டு
பூண்டமனதுறுதியினால்மோசகமேசெய்து
பூரணமாய்க்கும்பகத்திற்பூரணமாய்நின்றால்
தாண்டவத்திற்சிவனைவென்றதிரிபுரைதான்வந்து
தன்மையுள்ளகல்மணியென்றருள்செய்வாளே.

அருளீய்ந்துயோகத்துக்கறிவுஞ்சொல்லி
அருமையுடன்பூரணத்திலேறிவாய்நின்றால்
திருவிருந்தபதியானசாரூபபதவி
சிவசிவாசீக்கிரத்திற்சித்தியாகும்
மருவிருந்தமவுனமடாமனோன்மணியின்வீடு
மார்க்கமுடன்கண்டுதவும்யோகஞ்செய்வார்
குருவிருந்தபதிநோக்கித்தவமேசெய்தால்
கூடுதியாகுமட்டாதருவைக்காரே.

## பூரணத்தின்குணம்.

காரப்பாமந்திரத்தின்மகிமைசொன்னேன்
காசினியிலிந்நூலைக்காட்டவேண்டாம்
வீரப்பாவெசப்போரைபடிக்கவேண்டாம்
வேதாந்தமறியாரைச்சேர்க்கவேண்டாம்
தேரப்பாமனந்தேறித்தெளிவாய்நில்லு
தெளிவானபூரணத்தின்செய்கைகேளு
ஆரப்பாவறிவார்கள்பூரணத்தின்செய்கை
யாகராகுருவருளாலறிவிப்பேனே. (௧௬)

## அண்டபிண்டசமாதிவைப்புமெழுகு.

அறிவானபொருளாகுமண்டபிண்ட
மமைந்தகருப்பிண்டமதினண்டந்தன்னைக்
குறியானதொடுகுறிபோலண்டம்வாங்கிக்
கூர்மையுடன்மேலோட்டைச்சீவிப்போட்டுப்
பரியானவண்டமென்றயிளநீர்தன்னைப்
பக்குவமாய்க்கண்திறந்துரவிபீசஞ்செலுத்தி
திருவானவெடியுப்பைப்பாண்டமதிலிட்டுத்
தெகட்டாதவண்டமதையதன்மேல்வையே. (௧௭)

வைத்துமேலுப்பிட்டுமேற்சட்டிமூடி
மார்க்கமுடன்சீலைசுத்திமண்பூசிமைந்தா
கைத்திட்டமாகவேசமாதிதனில்வைப்பாய்க்
கனமாகநீயிருக்குமொடுக்கமதுதனிலே
மெய்த்திட்டமாகவேமண்டலமேசென்றால்
மேன்மைபெறச்சமாதிதன்னைவிரும்பிமிகத்திறந்து
மைத்திட்டமாகவேபார்னைதனிலண்ட
மார்க்கமுடனண்டமதைமனதறிவால்வாங்கே. (௧௮)

வாங்கியந்தவண்டத்தின்கருவைநீயு
மகத்தானமூங்கானில்விட்டுமைந்தா
பாங்குபெறரவிதனிலேவைத்துக்காரு
பக்குவமாய்ப்பின்னுமதில்ரவிபீசஞ்சேரு
நீங்கில்லாக்கரியுப்புநாலிலொன்றுபொடித்துச்
செவ்வையுடன்பூரணத்திற்சேர்த்துமிகநன்றாய்த்
தாக்காதரவிதனிலேகாயமிகப்போடு
தன்மையுடன்காய்ந்துதன்றாய்மெழுகாகுமாமே. (௧௯)

ஆமப்பாமெழுகெடுத்துப்பதனமாக
அன்பாகமேருதனிலடக்கம்பண்ணி

தாமப்பாவெஃகலை அஃகலைதன்னிற்
    றயவாகமனதறிவால்தானிருந்துகொண்டு
நாமப்பாசொல்லுகிறோம்மேருவைமுன்னிறுத்தி
    தன்மையுடன்மானதமாம்பூசையதுசெய்து
காமப்பாலானபரிபூரணமேயென்று
    காயாதிகர்ப்பமென்றுதுணிந்துமனம்போற்றே.

பேற்றுவதுபூரணமேயேகவஸ்து
    பொருளான அருவுருவேயென்றுபோற்றி
நாற்றிசையுமெனையாண்டுக்கொள்ளவந்த
    நாரணியேகவுமாரிநாதாந்தத்தில்
தேற்றியேமனந்தேற்றித்தெளிவாய்நீயுஞ்
    சிந்தைமனதொன்றாகவெனையாட்கொண்டு
காத்தருளவேண்டுமென்றுமைந்தாநீயுங்
    கருணையுள்ளபூரணத்திற்பணிவிடைதானெடுமே.

எடுத்திடுக்கையைவைத்துவலக்கரத்தால்மூடி
    யேகபரிபூரணியேயென்றுபோற்றி
அடுத்தமனைச்சுழிமுனையில்மனதைநாட்டி
    யன்பாகரேசகபூரகமுஞ்செய்து
தொடுத்தமனதறிவாலேவாசிபூட்டித்
    தொடுகுறிபோற்கும்பகத்திலிருந்துகொண்டு
கொடுத்துவிடுநாலின்மேற்பூரணத்தைமைந்தா
    கும்மெனவேவாய்மூடியிருந்துமிகப்பாரே.

பாரப்பாநீயிருந்துநாவுதனிலமுர்தம்
    பாயுமடாவந்தமுர்தம்பசிதீரவுண்ணு
ஆரப்பாவுனக்கீடுசொல்லப்போறேன்
    அரகராதேவாதிதேவனுக்கும்
நேரப்பாகுருவருளால்மனோன்மணிதான்வந்து
    நிலைநிறுத்திஞானபதம்நன்றாய்ச்சொல்லி
பேரப்பாநீபெற்றபேர்தானென்று
    பெருமையொடுசாயுச்சியபதவியருள்வாளே.

கட்டுக்கொடிகருவித்தை.

வாளப்பாசாயுச்சியபதவிதனைமைந்தா
    வரிசையுடநால்பதமும்நன்றாய்ச்சொன்னோம்
ஆளப்பாநால்பதமுமாண்டவர்களாரு
    அருமையுள்ளசித்தரிலேகோடிக்கொன்று
மேளப்பாலோகமுடன்கீழுலகம்ரெண்டில்
    விபரமுடன்வாழுமுயிர்பயிர்கட்கெல்லாம்

கேளப்பாசெய்யாதவசியமொன்றுசொல்வேன்
 கூற்புத்தின்மேற்கட்டுக்கொடியதனைவாங்கே. (௪௪)
வாங்கியத்தக்கொடியதனைவுலரப்போட்டு
 மார்க்கமுடன்கருக்கிநன்றாயெடுத்துக்கொண்டு
திங்கில்லாவெடியுப்புகர்ப்பூரஞ்சினத்
 தெகட்டாதயித்துப்புகரியுப்புங்கூட்டி
பாங்குபெறவஞ்சப்பூந்தண்ணீர்விட்டுப்
 பக்குவமாயரைத்துருட்டிவட்டுப்பண்ணி
ஆங்கதைகொண்டேயெருவிற்புடத்தைப்போடு
 அப்பனேயிப்பிடித்துக்கருகுந்தானே. (௪௫)
கருகிநின்றகரிக்குநீகாய்க்கறியுங்கூட்டிக்
 கலவமதில்பழச்சாற்றால்நன்றாயாட்ட
உருகிநின்றமெழுகதுபோல்மையுமாகும்
 உகமையில்லாமையதனைச்சிமிளில்வைத்து
பெருகிநின்றமையெடுத்துத்திலர்தம்போட்டுப்
 பேருலகிற்சென்றுவாமைந்தாமைந்தா
தருகிநின்றவுயிர்ப்பயிர்கள்வணக்கமாகித்
 தன்பதமேகெதியெனவேசார்வார்பாரே. (௪௬)
பாரப்பாவசியமொன்றுசொன்னேனிந்தப்
 பக்குவத்தையொருவருக்கும்பகரவேண்டாம்
தேரப்பாமனத்தேறிவசியம்பூண்டு
 செவ்வையொடுதவசிருப்பாய்ச்சிவனேயென்று
காரப்பாபெரியோரைத்தொண்டுபண்ணிக்
 காசினியில்நன்மையுள்ளநாட்டமாய்நில்
பேரப்பாதேவாதிதேவனென்பார்
 பெருமையுள்ளவஞ்சனத்தின்வகையைக்கேளே. (௪௭)

அஞ்சனம்.

கேளப்பாவரிதாரக்கட்டிவாங்கிச்
 சிறுமையுள்ளகல்லுப்புஞ்சருகுங்கூட்டி
மாளப்பாகல்வமதிலாட்டிப்பில்லை
 மார்க்கமுடன்றான்பிடித்துக்காயப்போடு
கோளப்பாவில்லாமற்புடத்தில்நன்றாய்க்
 கூர்மையுடன்கருக்கியதையெடுத்துக்கொண்டு
தேளப்பாயெரண்டத்தெண்ணெய்விட்டு
 தெளிவாகமத்திக்கமையாய்ப்போமே. (௪௮)
மையானவஞ்சனத்துக்கிதுவேமூலம்
 மார்க்கமுடனஞ்சனதேவிதன்னை

மெய்பாகவல்பதத்தைப்பணிந்துக்கொண்டு
மேன்மைபெறச்சிமிழ்தனிலேயடக்கம்பண்ணி
கையாகமைச்சிமிழைத்திறந்துப்பாரு
கண்கரித்துநீர்விழுந்துஇறக்குங்கைதான்
எய்யாதபாதாளந்துலைதானேனும்
என்மகனேயிதில்நிதிகள்காணலாமே,

தானுவதுவெகுநிதிகள்கண்டாயானால்
கண்ணிமையாற்பாராதேகடக்கதில்லு
பேனுவதுவெந்தநிதியென்றாயாகிற்
பேரொளியாந்தீபவொளிபேணித்தேடு
தோனுவதுசுருபநிலையதுதானப்பா
சுருபமென்றாலாரறிவார்சோதிசோதி
ஊனுவதுவுடல்பொருளோடாவிமூன்று
முற்றப்பார்வெட்டவெளியாகுந்தானே.

தானென்றசரிதைமுதல்ஞானவரைசொன்னோம்
சமரசமாய்த்தேகவச்சிரக்காயஞ்சொன்னோம்
கோனென்றகுருவருளால்தவமகிமைசொன்னோம்
கூர்மையுள்ளதவமதுக்குநிஷ்டைசொன்னோம்
மானென்றநிஷ்டைதனக்குறுதியான
மகத்துவமாந்தெரிசனத்தைவழுத்தக்கேளு
தேனென்றபிரிதிவாமதனோடொக்கத்
தெகட்டாதவமுர்தமென்றுபூரமாமே.

வர்ணக்களிப்பு.

பூரமுடன்லிங்கமென்றதெய்வுசேரு
புகழாகவாயுவென்றநாகஞ்சேரு
வாரமென்றநாலுடனேமாயிநாத
மார்க்கமுள்ளதுருசுடனேவுப்புங்கூட்டிப்
பாரமென்றுமனதிலெண்ணியேயுங்கூட்டிப்
பக்குவமாய்க்கலவமதிற்பழச்சாற்விட்டு
காரமென்றசாரமதைவிட்டேயாட்டிக்
களும்பானபருவமதிற்சிமிழில்வையே.

வையப்பாசிமிழில்வைத்தகளிம்புதன்னை
மார்க்கமுடன்பணவிடைதானெடுத்துக்கொண்டு
வெய்யப்பாகளஞ்சிவெள்ளித்தகட்டிற்பூசி
விருப்பமுடனோட்டில்வைத்துச்சீலைசெய்து
நையப்பாவெருவடுக்கிப்புடத்தைப்போடு
நன்றாகச்சற்குருவைத்தொழுதுநில்லு

யப்பாபடமாறிவெடுத்துப்பாரு
பழுத்துயிக்ப்புதிருவையதாம்பாரே. (௫௩)

## வேதைமார்க்கம்.

பாரப்பூரெசம்புநீரிலேதடவித்தில்
பக்குவமாய்ப்புடம்போடப்பழுக்குமப்பா
நீரப்பாகுடவனைத்தான் நகடாய்த்தட்டி
நேர்மையுள்ளமருந்ததனைத்தடவிக்காய்ச்ச
ஆரப்பாவறிவார்கள்குடவன்மாற்றி
ஆறுவயதானதொருபொன்னுகுந்
தேரப்பாமனந்தேறியோகம்பாரு
சிவசிவாசிவயோகமுத்தியாமே. (௫௪)

முத்தியுள்ளதவமிலைக்குறுதியென்ன
முதலானயோகமடாசிவயோகந்தான்
பத்திகொண்டுபார்த்தவனேசித்தன்சித்தன்
பரமசிவயோகமதைப்பாரார்தானும்
அத்தியென்றதேகமதுவழிந்துபோகும்
அழிந்தாலுமோட்சநிலையறியமாட்டார்
சித்தமெந்தன்வாக்கியமென்றுசிவயோகந்தைத்
தேர்ந்தவனேசிவயோகியாகுந்நானே. (௫௫)

## சிவயோகப்பெருமை.

தானேதான்சிவயோகஞ்செய்யவேண்டித்
தன்மையுள்ளபெரியோராப்பணியவேண்டும்
வீணேதான்றிரிந்ததிலேதுண்டப்பா
வீண்பேசாய்த்திரிவாலையடிக்கவேண்டாம்
தூணேதான்றரும்பாலுற்றரும்புதூணுஞ்
சொல்லுவார்பெரியோர்கள்பழமையாகும்
பூணேநீசிவயோகம்பூண்டால்தேகம்
பொன்றரும்புபோல்தேகப்புதுமையாமே. (௫௬)

ஆமப்பாதேகத்துக்குறுதியென்ன
அருளானகாயாதிகர்ப்புங்கர்ப்பம்
தாமப்பாகாயாதிகர்ப்பங்கொண்டால்
தவமானதவப்பலத்தானதுவேயாகும்
போமப்பாவபமிருத்துவெங்கேபோச்சு
புத்திகொண்டபூரணந்திலொடுங்கிப்போச்சு
நாமப்பாவென்றபதமெங்கேபோச்சு
நந்தியென்றதிப்பிடித்துநசித்துப்போச்சே. (௫௭)

போச்சப்பா நந்தியென்ற செந்திப்பட்டுப்
பேசறிந்து நரைதிரையும் பொடித்துப்போச்சு
மூச்சப்பா வடங்கிநின்ற வண்டந்தன்னில்
முனையான சுழிமுனைமேற்றீபந்தோன்றுங்
காச்சப்பா வத்தீபத்தன்னிற்றேசஞ்
காச்சினால் தேகமதில் கசடுபோகும்
ஆச்சப்பா வக்கசடு கண்டதானால்
அம்பரத்தின் தெரிசனத்தி லடுக்கலாமே. (௫

## சாஸ்திரவிபரம்.

அடுக்காகவாயிரத்தை யடுத்துப்பாரு
வதின்பிறகு பலதிரட்டை யறிந்துபாரு
முடுக்கான விநோதவகை நூறும்பாரு
மூர்க்கமுள்ள வயித்தியத்தை முழுதும்பாரு
ஒடுக்கமுள்ள பஞ்சாவைஷியுறுதிபாரு
வுண்மையுள்ள சோசியமாம்பத்தும்பாரு
இடுக்கமுள்ள மனதொடுங்காமர்வாக்யஞ்
செப்பினசொற்றவராமற்றேர்ந்துபாரே. (௬

பாரப்பா நாம்சொன்னவாக்கியந்தன்னிற்
பழுதொன்றும் வாராமற்பற்றிப்பார்க்க
நேரப்பா சிவலோகமார்க்கஞ்சொன்னேன்
நெறியான நூல்தேடி நினைவாய்ப்பாரு
தேரப்பா மனந்தேறந்தேகந்தேறஞ்
சிவசிவா வாசியதற்குறுதிதோன்றும்
வீரப்பா கொண்டுதலை தறிக்குமாந்தர்
வீணருடன் பேசாதே விண்ணைப்பாரே. (௭

## தன்னைத்தானறிதல்.

விண்ணைப்பார் தன்னைப்பார் மண்ணைப்பாரு
மேன்மைபெறக் குருவருளை மேவிப்பாரு
பெண்ணைப்பார்த்தலையாதே பெண்டான்றேகம்
பிரியமுடன்றேகமதைப் பேணிப்பார்த்தால்
கண்ணப்பா துலங்குமடா வந்தக்கண்ணாற்
காணலாஞ்சித்துவெகு கண்ணிற்காணும்
மண்ணப்பா வென்றுசடந்தன்னைப்பேணு
மாந்தருக்குவென்னவருமண்தானுமே. (௮

ஆமப்பா மண்ணான பிரிதிவினாலே
அநேகவஸ்துவுண்டாச்சு அதேதென்றுக்கால்

வாமப்பால்மதியமுர்த்தந்தன்னுலந்த
   மகத்தானவாகாயஞ்சிவமுமாச்சு
நாமப்பாசொல்லுகிறோமண்ணும்விண்ணும்
   நலமர்திவாதியந்தஞ்சத்திசிவமாச்சு
தாமப்பாகுருவருளாலசத்திசிவந்தன்னைத்
   தாரணியிற்கண்டவனேதவசியாமே. (கஉ)

ஆமென்றதவமுறுதிக்கின்னமொன்று
   அன்பாகச்சொல்லுகிறோம்நன்றாய்க்கேளும்
நாமென்றசொல்லகத்திப்பூரிநாதம்
   நன்றானநாதமடாசத்திசத்தி
தாமென்றபிரிதிவாந்தன்னோடொக்கத்
   தயவானகெவுரியுடன்சிலையுங்கூட்டி
ஊமெயன்றநாகரசங்கூடச்சேர்த்து
   ஓர்திறையாய்க்கலவத்தில்தன்றாயாட்டே. (கங)

ஆட்டுவதுசம்பழத்தின்சாறாலாட்டி
   யப்பனேநெட்டடங்கநன்றாயாட்டிக்
கூட்டுமதுஒன்றாக்கிவட்டுப்பண்ணிக்
   குண்டலமாஞ்சட்டிதனில்நடுவேவைத்துப்
பூட்டுவதுதாம்பரத்தின்கின்னிதன்னால்
   பொருந்தவேமூடிதன்றாய்மணலும்போட்டுத்
தாட்டிகமாய்த்தியெரித்துப்பதத்தைப்பாரு
   தயவானபதமதுவைச்சொல்லுவேனே. (கச)

வேதைமார்க்கம்கூடறுவது.

சொல்லுவேன்சொரித்தமணல்கருகிற்றானால்
   சுத்தமுள்ளபக்குவமென்றெடுத்துக்கொண்டு
வெல்லுவேனிதற்கிரட்டிதாம்பரத்தை
   விசையாகவுருக்கியந்தமருந்தைத்தானும்
நல்லுவேனுருக்குமுகந்தன்னிலீய
   நாற்றமுள்ளசெம்பதுவுங்கட்டிப்போச்சு
கொல்லுவேனென்றசொல்லிவெள்ளிபொன்னில்
   குற்றமற்றசெம்புமூன்றொன்றாய்க்கூட்டே. (கரு)

கூட்டிநன்றாய்க்குகைதனிலேயுருக்கிப்பாரு
   குருவானதிருவருளாள்மாற்றெட்டாகும்
தாட்டிகமாய்ப்பத்திலொன்றுதங்கஞ்சேர்க்கத்
   தயவானதங்கமடாவென்னசொல்வேன்
பூட்டானபூட்டருக்குஞ்சத்திசிவந்தன்னைப்
   பூரணமாய்க்கண்டுமனதறிவாய்தின்றால்

நீட்டிமுனைமழுங்காதகருமுனையின்மீதே
திருவான அறிவுருதிபவெளியாமே. (கூ
ஆமப்பாயின்னமொன்றுகருவைக்கேளு
ஆதியென்றலிங்கமுடன் துருசுங்கூட்டித்
தாமப்பாகண்டிடைக்கு ஆதிசேர்த்துச்
சம்பழத்தின்சாறதினாற்கலவத்தாட்டி
நாமப்பாசொன்னபடிவட்டுபண்ணி
நன்மைபெறமணல்மறைவிற்புடத்தைப்போடு
சாமப்பாசரக்குவகைமூன்றுதானுஞ்
சமரசமாய்க்கட்டியதுதிட்டமாமே. (கூ

திட்டமுடன்பதமாறியெடுத்துக்கொண்டு
செவ்வையுடன்செம்புருக்கிமருந்தைத்தூவாய்
இட்டமுடன்செம்பிடைக்குவொட்டியீவா
யிருண்டசெம்புகட்டியதுயிறுகிநிற்கும்
பட்டசெம்புநாலுடனேவெள்ளியாகும்
பக்குவமாயுருகிப்பார்மாற்றுறாகும்
நட்டமென்னபத்திலொன்றுதங்கஞ்சேர்க்க
நயமாகவெட்டுவயதாகும்பாரே. (கு

வெள்ளிவித்தை.

பாரப்பாபிரிதிவின்கடாட்சத்தாலே
பக்குவமாய்வெகுதொழில்களாடலாகும்
தேரப்பாமனந்தேறிவெள்ளிவித்தைச்
செவ்வையாய்ச்சொல்லுகிறோம்நன்மையாக
நீடப்பாநிறைந்துநின்றவெள்ளீயத்தில்
நினைவாகவந்திருக்கும்ரசத்தைத்தாக்கி
சேரப்பாவதற்குநிகர்பாஷாணத்தைச்
சேர்த்துநன்றாய்ப்பிரிதிவைச்சேர்த்துக்கொள்ளே.

சேர்த்துநன்றாய்க்கலவத்தில்பழச்சாற்றைவிட்டுச்
செவ்வையாய்த்தானரைத்துவட்டுபண்ணிப்
போற்றிநன்றாய்மண்மறைவிற்புடத்தைப்போடு
போக்கானநாற்சரக்குங்கட்டிப்போகும்
பார்த்திபனேயதையெடுத்துவைத்துக்கொண்டு
பதிவாகச்செம்புருக்கியதனிற்றாக்கு
நாற்றிசையுமெய்க்கவேதான்வெளுத்துப்போகும்
நன்றாகப்பத்திலொன்றுவெள்ளிசேரே.

சேர்த்துருக்கிப்பார்க்கவெள்ளிமாற்றுத்தானும்
செவ்வையுடன்பத்துமாற்றுகுமப்பா

பார்த்திபனேயிவ்வேதைபத்திப்பார்த்து
பத்திகொண்டுயோகமதில்பதிவாய்நில்லு
கார்த்தருளவேண்டுமென்றுகுருவைக்காரு
கருவாணம்தியுமுர்தமுள்ளேகொள்ளு
பூர்த்தமலர்வாசனைபோல்யோகநிஷ்டை
புநிதமுடனாசனமும்புகலக்கேளே.

நிஷ்டைவிபரம்.

கேளப்பாநிஷ்டையிடவிபரந்தன்னைக்
கெணிதமுள்ளபிர்மநிஷ்டைமாலிநிஷ்டை
கோளப்பாயில்லாதருத்திரநிஷ்டை
குருவானயேஸ்பரத்தினிஷ்டைதானும்
ஆளப்பாசதாசிவத்தினிஷ்டையோடே
ஐந்துநிஷ்டையாகுமதின்விபரங்கேளு
வாளப்பாபிர்மநிஷ்டையேதென்றக்கால்
மார்க்கமுடன்சுகாசனமாயிருந்துக்கொள்ளே. (எஉ)

பிர்மநிஷ்டை.

இருந்துகொண்டுசுகாசனமாய்மைந்தாநீயு
மின்பமுடன்ரேசகபூரகமும்பண்ணி
அருந்தவமாய்க்கும்பகத்திலிருந்துக்கொண்டு
அசையாதமூலமதையன்பாய்ப்பார்த்தால்
திருவிருந்தமலர்க்கமலமீதிலேதான்
தேவனெனும்பிர்மத்தைத்தெரிசிப்பாய்பார்
குருவிருந்தகுண்டலியின்மூலமப்பா
குணமாகவும்மூலங்குறியாம்பாரே. (எங)

மாலிநிஷ்டை.

குறியானபிர்மத்தினிஷ்டைசொன்னேம்
குணமாகவதின்மேலேகூறக்கேளு
அறிவானமாலினிடநிஷ்டைதானும்
அப்பனேயஷ்டயோகமமைத்துக்கொண்டு
விரிவானரேசகபூரகமும்பண்ணி
மேலானகும்பகத்தில்வாசிபூட்டி
நெறியானபூரகத்தைப்பார்த்தாயானால்
நிசமாகவிஷ்ணுபதம்நேரலாகும். (எச)

உருத்திரநிஷ்டை.

ஆமப்பாமாலினிடநிஷ்டைசொன்னேம்
அரகராருத்திரநிஷ்டையருளக்கேளு
நாமப்பாசொல்லுகிறேம்பாதம்ரெண்டும்
நன்றாகவிசைபூட்டித்தடைமேலேற்றித்

தாமப்பாரேசகப்பூரகமும்பண்ணித்
தன்மைபெறக்கும்பகத்தில்வாசிபூட்டி
வாமப்பால்மதிபெருகுமனுகதத்தை
மார்க்கமுடன்பார்த்ததினால்வளமைகேளே. (எரு)

வளமையென்னசொல்லுகிறோம்நன்றாய்க்கேளு
மார்க்கமுள்ளருத்திரனைவளமாய்க்காண்பாய்
தளமைபெறருத்திரனைக்கண்டபோது
சகலசவுபாக்கியமுந்தானேதங்கும்
இளமையுள்ளருத்திரநிஷ்டைசொன்னோமையா
ஏகாந்தமஷ்டபாநிஷ்டைகேளு
நலமைபெறக்குந்தவைத்துவலக்கால்தூக்கி
நன்றாகவிடக்கால்மேல்நயந்துபூட்டே. (எசு

மயேஸ்பரநிஷ்டை.

பூட்டியந்தக்கைகயிரண்டும்நிலத்திற்றாக்கிப்
பூரணமாய்ரேசகபூரகமும்பண்ணித்
தாட்டிகமாய்க்கும்பகத்தில்வாசிபூட்டித்
தயவாகவிசுத்திநிலைதன்னைப்பார்த்தால்
நாட்டதிகமாகமயேஸ்பரனார்பாதம்
நன்றாகத்துலங்குமடாநயந்துபாரு
தேட்டானதெட்டுகள்தானென்னவென்றால்
சிவசிவாவைந்துநிஷ்டைதிறமாய்த்தேடே

சதாசிவநிஷ்டை.

திறமாகமயேஸ்பரத்திநிஷ்டைசொன்னோம்
சிவசிவாசதாசிவத்திநிஷ்டைகேளு
உறமாகவொட்டியாணம்பந்தம்பண்ணி
ஒருமையுடன்யோகதெண்டையுட்கைசேர்த்து
திறமாகவிபூதியுந்தளமாய்ப்பூசி
நேசமுடன்ரேசகபூரகமுஞ்செய்து
பரமானகும்பகத்தில்வாசிபூட்டிப்
பத்திகொண்டுஆக்கினையைப்பதியாய்ப்பாரே.

பார்க்கையிலேசதாசிவத்தின்பாதந்தோன்றும்
பதிவானமனோன்மணிதானமூர்த்தமீவாள்
தீர்க்கமுடனந்தமூர்த்தங்கொண்டபோது
சிவசிவாகயிலாயத்தேகமாகும்
மார்க்கமுள்ளமதியமூர்த்தத்தன்னுத்தேகம்
மகத்தானதேகமடாபிர்மம்பிர்மம்

தூர்க்குமிந்தபிர்மபூதக்கிடைக்குமோதான்
அருளானபூரணத்தாலமைக்கும்வாறே. (எகூ)

மதியமூர்தலேகியம்.

வாரானமதியமூர்தமொன்றுசொல்வேன்
மகத்தானவமூர்தலேகியந்தான்மைந்தா
பேரான்வாணியோர்படிதான்வாங்கிப்
பிரியமுடனைந்துபலஞ்சர்க்கரைதான்சேர்த்து
கூராகவடுப்பேற்றித்தீயைமூட்டிக்
குணமாகப்பாகுவருஞ்சமயந்தன்னில்
சீராகச்சாதிக்காய்சாதிபத்திரி
திறமானகிறாம்புமூன்றொன்றால்வாங்கே. (அ௰)
வாங்கடாமூச்சரக்குமூன்றுபலமாக
மைந்தனேயிதற்கிரண்டுமூலிகைதான்சேர்த்து
பாங்குபெறவிளவறுப்பாய்வறுத்துக்கொண்டு
பதிவாகச்சூரணமேசெய்துமைந்தா
திங்கில்லாப்பாகுதனிற்றூவித்தூவித்
திறமாகக்கிண்டிவிடுநன்றாய்மைந்தா
ஆங்கதிகொண்டேயிறுகிப்போனாற்பின்னு
மப்பனேசர்க்கரையைச்சேர்த்துக்கிண்டே. (அக)
கிண்டியந்தலேகியத்தைப்பதனமாகக்
கிருபையுடன்பரணிதனிலடக்கம்பண்ணி
கொண்டதொருலேகியத்தில்பணவிடைத்தான்
குறிப்பாகத்தானெடுத்துவைத்துக்கொண்டு
அண்டர்பிரானருள்பெருகபுயத்தைப்போற்றி
யன்பாகப்பூசித்துலேகியத்தைமைந்தா
நின்றுடும்நாவினில்வைத்தமூர்தங்கொண்டு
நினைவாகரேசகபூரகமும்பண்ணே. (அஉ)
பண்ணப்பாகும்பகத்தில்வாசிபூட்டிப்
பத்திகொண்டுநின்றதனாற்பலிக்குஞ்சித்தி
விண்ணப்பாதான்றுலங்கிவிண்ணிலேதான்
விதமாகத்தீபவொளிகண்ணிற்காணும்
தண்ணப்பாவத்திபந்தன்னைமைந்தா
நயமாகக்காயமதிலுறுதியாகும்
கண்ணப்பாகாணுடனேசெவ்வையானால்
கைலாயம்வைகுந்தங்காணலாமே. (அ௩)

வல்லாரைகர்ப்பம்.

காணவேயின்னமொருகர்ப்பஞ்சொல்வேன்
கருவானவல்லாரையார்காண்பார்கள்

தோணவேவல்லாரைசொல்லக்கேளு
    தொல்லுலகில்மற்றக்கருசொல்லப்போமே
பேணவேகுருவருளால்சொல்வேனப்பா
    பிண்டமடாவலைமத்தமுதலாறுமாதம்
பூணவேயக்கருலைவாங்குதற்குப்
    பூரமுடன்வெல்லமதைப்புணர்ந்துபாரே.

பாரப்பாபூரமுடன்வெல்லம்ரெண்டும்
    பக்குவமாயெருக்கம்பால்தன்னாலாட்டி
சீரப்பாகுன்றிமணியளவாய்ச்செய்து
    திறமாகவொருவுண்டைமாதுக்கீய்ந்தால்
வீரப்பாசெய்யாமற்பிண்டந்தானும்
    விதனமன்றிவிரும்பிபிகவருகுமப்பா
நீரப்பாவழுரிதனில்பூரம்போட்டு
    நினைவாகவல்லாரையதனிற்போடே.

போட்டுநன்றாய்நீர்வற்றவெரிப்பாயப்பா
    புகழாகநீர்வற்றியவிந்துதென்றால்
தேட்டமுடனதையெடுத்துக்கலவத்திட்டுத்
    திறமாகமைப்போலேயாட்டிக்கொண்டு
பூட்டுவாய்மிளகுடனேசாதிக்காயும்
    பூவுடனேபத்திரியுமேலங்கூட்டி
ஆட்டுவாய்நெய்பாலைநன்றாய்மைந்தா
    அனைத்தெடுத்துப்பரணிதனிலடக்கம்பண்ணே

பண்ணப்பாபரணிதனிலடக்கம்பண்ணி
    பக்குவமாய்மேல்மூடிச்சீலைசெய்து
நண்ணப்பாகுழிவெட்டிப்புதைத்துப்போடு
    நலமானமண்டலஞ்சென்றெடுத்துக்கொண்டு
திண்ணப்பாகுன்றிமணியளவின்வீதம்
    திறமாகமண்டலமேகொண்டாயானால்
எண்ணப்பாநான்சொல்லப்போறேனையா
    ஏகாந்தச்சிவயோகத்தியல்புதானே.

தானென்றதத்துவத்தையறியவேண்டும்
    தன்மையுள்ளபூரணத்தைக்காணவேண்டும்
ஊனென்றமதியமுர்தங்கொள்ளவேண்டும்
    உகமையிலாச்சத்திசிவபூசைவேண்டும்
தானென்றவாணவத்தைநிறுத்தவேண்டும்
    தாதாந்தப்பேரொளியைக்காணவேண்டும்

வீணொன்றவெறும்பேச்சாய்த்திரியவேண்டாம்
வேதாந்தக்கர்ப்பமொன்றுசொல்லக்கேளே. (௮௮)

கடுக்காய்லேகியம்.

சொல்லக்கேள்கடுக்காய்லேகியத்தைமைந்தா
சோதியென்றகடுக்காய்தானூர்காண்பார்கள்
விள்ளக்கேள்பொற்கடுக்காய்செனித்தநாளில்
விபரமுடன்மற்றகடுக்காயைவாங்கி
அள்ளக்கேளக்காயைத்தறித்துநல்ல
அப்புவினிற்றான்போட்டும்பிசைந்திறுத்தித்
கொள்ளக்கேள்நீயெல்லாம்பிழிந்துநல்லக்
கூர்மையுள்ளவெயில்தனிலேகாயப்போடே. (௮௯)
போட்டெடுத்துமறுபடியுமுரலிற்றாக்கிப்
பொடியாகத்தானிடித்துத்தண்ணீர்விட்டுத்
தாட்டிகமாய்த்தான்பிசைந்துபிறுத்துப்போடு
தன்மையுடன்முன்போலேகாயப்போட்டு
வாட்டியெடுபத்துமுறையிந்தவிதமாக
மார்க்கமொடுசெய்ததினால்வளமையாகும்
கேட்டமுடனின்னமொருசத்திசொல்வோஞ்
சிவசிவாபழங்காடிதன்னைவாங்கே. (௯௰)
வாங்கிநன்றாய்முன்போலேசாறைத்திறுத்து
மைந்தனேநீர்வற்றக்காயப்போடு
ஏங்கியேதிரியாதேசம்பழச்சின்சாற்றி
விறுக்கவேபிசைந்துருட்டிரவியிற்போடு
ஆங்கதுகொண்டேயெடுத்துப்பொடியதாக்கு
அப்பனேபீங்கானிலிட்டுக்கொண்டு
தீங்கில்லாப்பழச்சாறுபிழிந்துக்கொண்டு
செவ்வையாய்த்தானித்துவுப்புச்சேரே. (௯௧)
சேரப்பாவுப்புமிஞ்சிக்கறிப்பில்லாமற்
செவ்வையுடன்தானரைத்துபிறுத்துக்கொண்டு
வாரப்பாகடுக்காய்சூரணத்தில்மைந்தா
வரிசையுடன்சாறுவிட்டுப்பிசறிக்கொண்டு
தேரப்பாபதப்படுத்திநிழலில்வைத்து
நேர்மையுடன்பரணிதனிலடக்கம்பண்ணி
காரப்பாபொருத்தநாள்பார்த்துநீயும்
கருவானசூரணத்தில்பணவிடைதான்கொள்ளே. (௯௨)
கொள்ளவேமண்டலத்திற்சிதம்போகுங்
கொண்டதொருமலங்கள்நிதங்கதுபோகுந்த

மெள்ளவேவாத நீர்பித்தநீரும்
    மேலானசிலேத்துமத்தின்சீதங்கட்டும்
சுள்ளவேவாங்கிவிடுங்கடுக்காய்சர்ப்பஞ்
    சுகமாகக்கொண்டுவர நரைதிரைகள்மாறும்
விள்ளவேவேண்டாங்காண்மேதகவச்சிரம்
    மேலானவயதுசிறுவயதாம்பாரே. (௯

பாரப்பாயிந்தமுறையார்க்கென்றாலும்
    பகராதேராமரிடவாக்கியந்தன்னை
காரப்பாமனதுறுதியாலேமைந்தா
    கருவானநூலிருக்குதென்றுசொல்லி
வீரப்பாகொண்டுமதிகெட்டுநீயும்
    வீணருடன்வாய்ச்சமர்த்தால்விளம்பினாக்கால்
நீரப்பாதான்பெருகிசிரசிலேறி
    நின்றநிலைதப்பியுடலழிந்துபோமே. (௯

உடலழிந்துபோனதினாலுனக்கேதுண்டு
    உண்மையுடன்மவுனமதாயிருந்தாயாகில்
சடலமென்றவாக்கையதுநிலைக்குமப்பா
    சண்டாளப்பயல்களுறவாகாதையா
படலறிந்துதிறக்கறியாநாய்கள்போலப்
    பாவிகள்தான்பொய்பேசிப்பரதவிப்பார்
குடலடித்துகுணமறிந்துகர்ப்பங்கொண்டு
    குருவானபதிநோக்கிக்குணமாய்நில்லே. (௯

குணமானகாயாதிகர்ப்பந்தன்னைக்
    கூறறிந்துகொண்டுவரும்போதிலேதான்
மணமானவெண்ணெயொடுபுளியுமாகா
    மாண்டிறந்தமீனுகாயிறச்சியாகா
கனமாகநாள்சொன்னவிந்தநாளுங்
    காசினியோர்தானறிந்துதள்ளானாயிற்
பிணமாகிப்போய்விழுவானையாவையா
    பிலத்ததொருபுத்தியினாற்கண்டுதள்ளே. (௯

தயிலம்.

தள்ளப்பாமற்றதெல்லாங்கொண்டுதேறு
    தவமானசடத்திற்குவுறுதியாகும்
கொள்ளப்பாதயிலமொன்றுசொல்லக்கேளு
    கூர்மையுள்ளவண்டமடாபலம்பத்தாகும்
விள்ளக்கேள்சருகுபலமன்பதாகும்
    விளம்பினதுவொண்டுமடாவாதியந்தம்

அள்ளக்கேள்ளொண்டையுமேபொடியாய்ச்செய்து
அப்பனேபாண்டத்திலடைத்திடாயே. (௧௭)

அடைத்ததின்மேலமுரிவிட்டுக்களிபோற்கிண்டி
யரகாராவிதனிலேயுலர்த்திக்கொண்டு
இடத்துடனேகுழித்தயிலமிறக்கியேதான்
செவ்வையுடன்பரணிதனிலடக்கம்பண்ணி
படைத்ததொருவண்டமதைமுன்போற்சுத்திப்
பக்குவமாய்ச்செய்துகொண்டுமைந்தாகேளு
செடத்துடையசத்தியிடநாதமொன்று
செங்கமலமாலினிடநாதமொண்டே. (௧௮)

மொண்டுடனேஒன்றதனைச்சேர்த்துக்கொண்டு
நேராகஅமுரிவிட்டுக்கலவத்தாட்டி
விண்டுப்போல்வட்டதனைப்பிடித்துநன்றாய்
வெய்யில்தனிற்காயவைத்துச்சிலைசெய்து
அண்டர்பிரான்றனைத்தொழுதுப்புடத்தைப்போடு
அப்பனேபுடமாறியெடுத்துப்பாரு
மண்டலங்கள்மெய்க்கவேதான்வெளுத்துநீறி
மாசற்றபற்பமதாயிருக்குந்தானே. (௧௯)

தானென்றபற்பமதையெடுத்துக்கொண்டு
தன்மையுள்ளபரணிதனிலடக்கம்பண்ணி
தேனென்றதயில்மதிற்பணவிடைதான்பற்பஞ்
செவ்வையுடன்றன்குழைத்துக்கொண்டாயாகில்
ஊனென்றதேகமதுவலுத்துநல்ல
வுறுதியுள்ளவாசியதுவசையாதப்பா
கோனென்றகுருவருளாலிந்தகற்பங்
கொண்டுசிவயோகமதிற்குறித்துநில்லே. (௨௰)

நில்லென்றசிவயோகமார்க்கந்தன்னில்
நீமகனேமனதுறுதியாகநின்றால்
சொல்லென்றசொற்களெல்லாமந்திரந்தானுகுந்
துருவமுள்ளதேகமதுபிற்மமாகும்
வில்லென்றவிசைபோலேவாசிதானும்
வேதாந்தச்சுடரொளிமேல்மேவிநிற்கும்
மல்லென்றமல்பிடித்தாப்போலேவையா
வாசியதுதேகமதில்வலுக்குந்தானே. (௨௧)

தானப்பாசிவயோகஞ்செய்யும்போது
தன்மையுள்ளதுபமொன்றுசொல்லக்கேளு

ஊணப்பாவண்டமறுபலந்தான்றண்டு
புகழ்பெரிசகஸ்தூரிமஞ்சள்தானும்
தேனப்பாமண்ஞ்சிட்டிக்கறுவாய்ப்பட்டைத்
தேக்குடனேயகிற்கட்டைத்தேவதாரம்
தாணப்பாஇழங்குடனேகிளியூறல்பட்டை
நலமானசாதிக்காய்ராசனைகூட்டே. (௱உ

கூட்டப்பாசரக்குவகைபதினொன்றுந்தான்
குணமாகக்கலவத்திற்றூளாய்ப்பண்ணி
மாட்டப்பாபசுவினெய்தன்னாலாட்டி
மைந்தனேயாட்டிவிடுமெழுகுபோலே
நாட்டப்பாசிறுபில்லையாகத்தட்டி
நலமானகரகத்தில்வைத்துக்கொண்டு
தேட்டப்பாசிவயோகஞ்செய்யும்போது
திறமாகத்தணலிலொருபில்லைவையே. (௱௩

வையப்பாதணலிலோர்பில்லைதன்னை
வைக்கயிலேபுகைமண்டிமேலேசாடும்
மெய்யப்பாசொல்லுகிறேம்புகைவாசமேறில்
மேன்மையுள்ளலகிரியடாவென்னசொல்வேன்
செப்பப்பாபில்லைதனைநெய்யிற்றோய்த்து
திறமானநெருப்பினிலேவைத்துக்காரு
பையப்பாவப்புகையினாலேமைந்தா
பரமகயிலாசவெளிபார்க்கலாமே. (௱௪

ஆமப்பாபுகைதானும்மெய்யிற்சாடி
யப்பனேசன்னிமுதல்வாதந்தீரும்
தாமப்பாபில்லிமுதல்சூனியங்கள்தீரும்
தருசாதகுட்டமெல்லாந்தவறுண்டோபோம்
போமப்பாசிலதோஷம்பொருமல்காந்தல்
பொல்லாதநெஞ்சடைப்புப்போகும்போகும்
நாமப்பாசொன்னபுகையார்க்குஞ்சொன்னால்
நல்யோகமார்க்கமதுநாடுந்தானே. (௱

நாடிப்பாரிருவிகற்பசமாதியாக
நன்மையுடனவ்வழியேநடந்துக்கொண்டு
தேடிப்பார்சற்குருவைநன்றாய்த்தேடு
தேடியவர்வசனமதிற்றிறமாய்நின்று
கூடிப்பார்சுழிமுனையைநன்றாய்க்கூட்டிக்
குருவாயபதிநோக்கியமுர்த்தங்கொண்டால்

வாடிப்போந்தேகமதுவாடாமையா
　வரிசையுள்ளவுரிசையைநீமறந்திடாதே. (௱௬)

மறந்திடாவுரிசையென்னவென்றுகேட்டால்
　மார்க்கமுடன்சொல்லுகிறேன்மகனேகேளு
கறந்ததொருகல்லுப்புநீருப்புந்தான்
　கண்டுகொண்டுகெடிகைநிதங்கொண்டாயாகில்
இறந்திடாதேயிருக்குங்காயங்காய
　மென்னசொல்வேன்மாயமென்றுலேகாந்தத்தில்
மறந்திடாதக்கினியையக்கினியிற்சேர்க்க
　மாண்டவர்களில்லையடாவழலைச்சித்தே. (௱௭)

சித்தானவழலையிடமார்க்கந்தன்னைச்
　செவ்வையாய்ச்சொன்னனடாவாயிரத்தில்
முத்தானமுப்பதிலுஞ்சொன்னேனந்த
　மூர்க்கமுள்ளவயித்தியத்தில்முறையாய்ச்சொன்னேன்
பத்தாசைகொண்டபலதிரட்டிற்றானும்
　பக்குவங்கள்நன்றாகப்பதிவாய்ச்சொன்னோம்
வத்தாகபூரணத்தையனதாய்க்கொண்டு
　மார்க்கமுடன்சிவயோகமிருந்திட்டேனே. (௱௮)

கல்லுப்புச்சுன்னம்.

இருந்திட்டபோதில்மனோன்மணிதான்வந்து
　யேகாந்தவழலைமுறைநன்றாய்ச்சொன்னாள்
திருந்திட்டவழலையென்றாலார்தான்காண்பார்
　சிவாயகுருவருளினாற்செப்பக்கேளு
பொருந்திட்டபூவழலையண்டக்கூறு
　பூரணமாய்நின்றதுவுங்கல்லுப்பாச்சு
கருந்திட்டமானதொருகல்லைவாங்கிக்
　கருவானசுத்தசலந்தன்னிற்போடே. (௱௯)

போட்டடுப்பில்வைத்துநீயெரிக்கும்போது
　புண்ணியனேநீர்வற்றியுப்புத்தானும்
தாட்டிகமாயூறலற்றுக்கட்டிப்போச்சு
　தயவானகல்லுப்பைவாங்கிமைந்தா
நாட்டியதோர்வெடியுப்புச்சீனங்கொண்டு
　நயமானகல்லுமேமூன்றுமொன்றாய்க்
கூட்டியேகலவத்திற்பொடித்துக்கொண்டு
　குருவானபழச்சாறுவதனிற்றாக்கே. (௱௰)

தாக்கிநன்றாயரைத்துருட்டிவட்டுபண்ணிச்
　சமத்தாகவிதனிலேகாயப்போடு

தூக்கிதன்றாய்ச்சுண்டிடவேகனிரிட்டாக்கால்
சுகமாகமண்சீலைவலுவாய்ச்செய்து
வாக்குமனதுறுதியிறைற்புடத்தைப்போடு
மைந்தனேபுடமாறியெடுத்துப்பாரு
நாக்குறுணிவெந்துவிடுஞ்சுன்னவேகம்
நாதாந்தக்கல்லுப்புச்சுன்னந்தானே. (

சுன்னத்தொந்தம்.

சுன்னமதைத்தானெடுத்துவைத்துக்கொண்டு
சுருக்கானாசமுடனேவங்கஞ்சேர்த்து
நன்னயமாயிதற்குநிகர்சுன்னங்கூட்டி
நாட்டியனைகலவத்திற்பழச்சாற்விட்டு
தன்மையுடன்மெழுகுபோலாட்டிப்பில்லை
தான்பிடித்துரவிதனிலேகாயப்போட்டு
உண்மையுடனோட்டில்வைத்துமண்சீலைசெய்து
வுத்தமனேபுடம்போடச்சுன்னமாச்சே. (
ஆச்சப்பாசுன்னமதிற்சுன்னஞ்சேர்த்து
அப்பனேவாய்நீராலரைத்துக்கொண்டு
பாச்சப்பாதுருசுதனைக்கங்கிபூட்டிப்
பக்குவமாய்க்காயவைத்துவோடுமூடி
பூச்சப்பாமண்பூசிப்புடத்திற்போடு
பொருமிவெந்துதுருசநவுஞ்சுன்னமாரும்
நீச்சப்பாவெகுநச்சுதுருசுசுன்னம்
நிலைத்துதென்றால்வெகுகோடிவேதையாமே. (
ஆமப்பாதுருசுநீறெடுத்துக்கொண்டு
அப்பனேநாலிலொன்றுவீரஞ்சேர்த்து
நாமப்பாசொல்லுகிறோம்வாய்நீர்தன்னால்
நன்றாகத்தானரைத்துவழித்துக்கொண்டு
தாமப்பாதாரத்திற்கவசஞ்செய்து
சமத்தாகரவிதனிலேகாயப்போடு
ஓமப்பாமண்சீலைவலுவாய்ச்செய்து
வுத்தமனேபுடம்போடநீறதாச்சே. (

லோகவாதிகுணம்.

நீறானதாளகநீறதிகமப்பா
நீள்திசையில்வாதிகளோவறியப்போறார்
பாறானநீறாலேயனந்தம்வேதை
பக்குவமாய்த்தானறிந்தோனவனேவாதி
கூறுதேசிவயோகமிருக்குதென்று
குணமறியாநெஞ்சரிடங்கூறவேண்டாம்

பேராசைதான்பிடித்துப்பொய்யைப்பேசிப்
பிதற்றிநூல்தனைக்கேழ்ப்பான்பேயன்தானே. (௱௰௫)
தானென்றபேயர்கள்தான்மெத்தவுண்டு
தானறித்து அவர்களுடன் சேரவேண்டாம்
ஊனென்றவுடலிதனையறியான்மட்டை
யொருசொல்லின்பயனறியானுறுதிசானுன்
தேனென்றவமுர்தமதையறிந்துகொள்ளான்
சிற்றின்பக்கூற்றறியான்தெருவிலேதான்
செம்மணென்றமாடுபோற்றிரிவான்சண்டி
வேல்வரப்புகீழ்வரப்புஅரியான்றானே. (௱௰௬)
அறியாதலோபனைத்தானடுக்கவேண்டா
மவர்களிடம்நூல்முறைகள்பேசவேண்டாம்
விரிவானவிலாசமதாயிருக்கும்போது
விண்பயல்கள்வந்துவுறவாடிக்கொண்டு
நெரியானபொருளெதுபயன்களேது
நிஷ்டைமுறைதனக்குறதியானதேது
பரிடானமரியமைத்தவாறங்கேது
பற்பவகைக்குறுதியென்னபகரொன்பாரே. (௱௰௭)
பகரொன்றுகேட்க்கின்றபசாசனைத்தான்
பக்குவாய்த்தானகற்றியறிவில்நில்லு
சிகரமென்றதீபவொளிதன்னைப்பாரு
சிவயோகநிஷ்டையிலேசென்றேநில்லு
அகரமென்றதேகமதிலாறுதார
மடுத்துநின்றநந்தியடாமூலாதாரம்
நிகரில்லாமவுனமடாபிரமபீடம்
நேர்மையுடன்பீடமதில்நேர்ந்துநில்லே. (௱௰௮)
நேர்ந்துகொண்டதாளகத்தினீற்றைவாங்கி
நேர்மையுடன் துருசுநீயொன்றாய்ச்சேர்த்துக்
கூர்ந்துநின்றவெடியுப்புச்சுண்ணந்தன்னைக்
கூட்டடாதாவிலொன்றுவாய்நீர்தன்னால்
ஆர்ந்துநன்றாய்க்கலவமதிற்குழப்பிக்கொண்டு
அப்பனேயறைப்பொடியையொட்டிப்பிட்டுச்
சேர்த்துநன்றாயொன்றாகக்குழப்பிக்கொண்டு
செவ்வையாய்க்குகைதனிலேயிட்டுமூடே. (௱௰௯)
மூடிநன்றாய் மண்சீலைவலுவாய்ச்செய்து
மூர்க்கமுடன்குகைதனிலேயழுகவூது
வாடிநன்றாய்மாண்டிறந்துவுருகிநிற்கு
மைந்தனே அயத்தோடேநாகஞ்சேரு

தேடிநன்றாய்ப்பரிப்துவுங்கூடச்சேரு
    செவ்வையுடன்சேர்க்கவொன்றாய்த்திரண்டுபோகும்
கூடிநன்றாய்த்திரண்டுநின்றவயக்களங்கைக்
    கூர்மையுடன்றானெடுத்துவைத்துக்கொள்ளே (௫௨
கொள்ளப்பாவயக்களங்கைவைத்துக்கொண்டு
    குருவானசர்க்குருவைத்தியானம்பண்ணி
நில்லப்பாமதிதனிலேபார்த்துக்கொண்டு
    நீமகனேகொடுத்துருக்கமாற்றெட்டாகுஞ்
செல்லப்பாபுடம்போடத்தங்கமாகும்
    சிவயோகந்தனக்குறுதியானதங்கம்
கல்லப்பாகசிந்துருகிநின்றதங்கம்
    கருவானவண்டமென்றதங்கந்தானே. (௫௩
தானென்றதங்கமடாபிர்மபீடம்
    தனையறிந்துசிவயோகத்தன்மையாரு
ஊனென்றவுடலுயிர்க்குமுதவியான
    வுற்றசிவயோகமதையார்தான்பார்த்தார்
வேனென்றசெகந்தனிலேகோடிக்கொன்று
    வேதாந்தஞ்சித்தாந்தமறிந்துநல்ல
தேனென்றவமுர்தமதைக்கண்டுகொண்டு
    சிவயோகச்சிந்தையிலேயிருந்திட்டாரே. (௫
இருந்திட்டபெரியோர்கள்மார்க்கந்தன்னை
    யென்னசொல்வேனவர்களுடமனதுதன்னை
கறந்திட்டபால்போலேசுத்தமான
    கருவானபிள்ளைகளைத்தேடிப்பார்த்து
வருந்திட்டமாகவேவசனஞ்சொல்லி
    வாக்குமனமொன்றாகநிலையுகஞ்சொல்லி
சிறந்திட்டசிவயோகமவனுக்கீய்ந்து
    செவ்வையுடன்குருவடியைத்தினமும்போற்றே.
போற்றென்றுபூந்திமகிநன்றாய்ச்சொல்லித்
    போக்குவருத்தாகிநின்றநிலையுஞ்சொல்லி
நீற்றென்றநீற்றினைத்தின்வகையுஞ்சொல்லி
    நிலையானவாதியந்தப்பொருளுஞ்சொல்லி
காற்றென்றமூப்பூவின்மறுமஞ்சொல்லி
    காயாகிகற்பத்தின்பேருஞ்சொல்லி
கூற்றென்றதிருநடனக்குறியுஞ்சொல்லித்
    குணமானயிடமறிந்துமிதுவேபாரே.
பாரானபெரியோர்கள்மார்க்கஞ்சொன்னேன்
    பின்பறிடாமூடரிடவழியுஞ்சொன்னேன்

கூறுதத்தாயர் இகர்ப்பஞ்சொன்னேன்
குருவானபதிநிலையின் குணமுஞ்சொன்னேன்
மாறுதவாசியிடவழியுஞ்சொன்னேன்
வாசிநின்றுதானிலங்குமவுனஞ்சொன்னேன்
ஆறுதமவுனத்தின்மேலேநின்று
அசைவில்லாத்தீபவொளியருள்சொன்னேனே. (௱௨௫)

சொன்னதொருசிவயோக சிருஷ்டிப்பா
சுருக்கமுள்ளநூலென்னவேமனதிலெண்ணி
நன்னயமாயுதயாதிகாலந்தன்னில்
நன்றாகத்தேகசுத்திநலமாய்ச்செய்து
அண்ணலெனுஞ்சற்குருவைத்தியானம்பண்ணி
யன்பாகவிபூதிமெய்யிலணிந்துக்கொண்டு
வின்னமில்லாப்பிர்மநிஷ்டைதனிலிருந்து
விரும்பிநன்றாய்ரேசகபூரகமும்பண்ணே. (௱௨௬)

புருவமையதானம்.

பண்ணப்பாகும்பகத்திற்பதிவாய்நின்று
பாக்கியமாஞ்சிவயோகங்கையில்வாங்கி
உண்ணப்பாமவுனமதாயிருநூறும்பாரு
வுத்தமனேயதைத்தொடுத்தநாதம்பாரு
கண்ணப்பாதுலங்குவதுபோலேயிந்தக்
கருவானசிவயோகக்கருக்கள்தோன்றும்
நண்ணப்பாவக்கருவைக்குறித்துக்கொண்டால்
நல்லசிவயோகமதில்நண்ணலாமே. (௱௨௭)

ஆமப்பாசிவயோகமறியவேண்டும்
மந்தாங்கமானகருக்காணவேண்டும்
காமப்பால்கானப்பால்கொள்ளவேண்டுங்
கைமுறையாய்ப்பூசைவிதிபண்ணவேண்டும்
வாமப்பால்கொண்டுமதியறியவேண்டும்
வரிசையுள்ளவுரிசைதனைக்காணவேண்டும்
தாமப்பாதன்னிலையைத்தானேகண்டு
சங்கையுள்ளசெங்கையிலேஸ்தானம்பண்ணே. (௱௨௮)

செங்கையென்றுலெங்கேயென்றுகேட்பாயாகிற்
கேசரத்திற்கேசரியாம்புருவமையம்
அங்கையடாசுழிமுனையிலஷ்டசெங்கை
யறுதினமுமவ்விடத்தேநாட்டமாக
சங்கையுடனின்றதிறல்ஸ்தானமாகுந்
தன்மையுடன்பூசிக்கத்தரிசனமுமாகும்

மங்களமாட்மனதொருமையாகநின்றால்
மகத்தானசிவயோகவரிசைதானே. (௱௨௪

வரிசையுள்ளபுருவமையமெங்கேயென்று
வாய்திறந்துசொல்லுதற்குநாவோயில்லை
புருஷிருடன்மனதுரிமையாகநின்று
பொற்குருவாஞ்சற்குருவைப்போற்றிநின்றால்
குருஷீமுகமவனறிந்துசொல்வான்சேரு
கு
பருவமதாயங்கிவளர்ந்தெழுந்தவாவிப்
பற்றுதடாபுத்தியென்றதுகையிற்றானே. (௱௫

தானென்றதுகையில்ந்தஆவிசென்று
தன்மையுடன்புத்தியிலேபற்றிநல்ல
கோனென்றபத்திநல்லதீபம்போலே
கொழுந்துவிட்டெரியுமடாகுணமாய்ப்பாரு
மானென்றவத்தியவொளியிலேதான்
மயங்காமற்றியங்காமல்வரிசையாகத்
தேனென்றருசிபோலேசிவயோகத்தைச்
சிந்தைதனைவைத்துக்கண்டவனேசிவயோகியாமே. (௱௧

இலர்தம்.

ஆமப்பாசிவயோகத்திருக்கும்போது
அருளானஇலர்தவகையொன்றுசேரு
நமப்பாசொல்லுகிறேன்மண்டத்தோடே
நலமானமாமஞ்சள்கஸ்தூரிமஞ்சள்
தாமப்பாசாதிக்காய்ச்சாதிபத்திரி
தாழம்பூத்தாளுடனேசூர்தனமும்பூவும்
காமப்பால்கல்ழுதமுங்கஸ்தூரிகோவுங்
களங்கமற்றபுழுகுடனேகர்ப்பூரங்கூட்டே. (௱

கூட்டப்பாசரக்குவகைபதின்மூன்றுந்தான்
குறிப்பாகவோரிடையாயெடுத்துக்கொண்டு
நாட்டப்பாகலவமதிற்பொடித்துக்கொண்டு
நலமானபழச்சாறும்பன்னீர்வார்த்து
ஆட்டப்பாவடிமிளகுபோலேமைந்தா
வளாக்கையிலேபுழுகிட்டுஅரைத்துநன்றாய்
நீட்டப்பாகயிறதுபோல்நீட்டிக்கொண்டு
நிழலுலர்த்திப்பதனமதாய்வைத்துக்கொள்ளே. (௱

கொள்ளுகிறவிதமென்னவென்பாயாகிற்
குணமாகச்சிவயோகத்திருக்கும்போது

கல்லுருவிப்த்திலர்தமைதனையெடுத்துக்கொண்டு
நாட்டப்பா குருபதிமேற்றிலர்தம்போடச்
சொல்லுகிற்மந்திரந்தானென்றுகேளு
சுருக்கடாசுவாவென்று திலர்தம்போட்டு
உள்ளுறவாயிருதயத்தில்மனதைநாட்டி
உம்மெனவேதம்பித்துவொடுங்கிநில்லே. (௱௯௪)

ஒடுங்கியந்தவொடுக்கமதிலொடுங்கிநில்லு
வுலகத்திலுள்ளவர்களுன்னைக்கண்டாற்
படித்துவுந்தன்பாதத்திற்பணிவாரையா
பக்குவமாய்ப்பிணியாளர்பணிந்துகண்டால்
நடுங்கிமிகப்பணிந்தோடும்பிணிகளெல்லாம்
நலமானசிவயோகத்தெதிர்ப்பட்டு
மடிந்துவிடும்பிணிகளெல்லாமுலகிலுள்ளோர்
மண்டிநிற்பாருன் சமுகங்கண்டிலாமோ. (௱௯௫)

திலர்தமை.

கண்டபடியின்னமொருகருவைக்கேளு
கருவானதிலர்தமையொன்றுசொல்வோம்
விண்டபடியாரறிந்துசெய்யப்போறார்
மேலானவேதாந்திசெய்வானப்பா
அண்டமெனுங்கருவெடுத்துவைத்துக்கொண்டு
அப்பனையேபரண்டத்தயிலத்தாலே
கண்டிடவேகுழைத்துநல்லரவியிற்போடு
தூசிசெத்தைவிழுவாமற்சுகமாய்க்காரோ. (௱௯௬)

காய்த்துநன்றாய்ரவிதனிலேகிண்டிக்கிண்டி
கனமாகநீர்வற்றகாயப்போட்டால்
பார்த்துநின்றரவியினிடவொளிதான்சென்று
பங்கபத்தின்மைதனிலேபற்றும்பாரு
சேர்த்துநின்றமையொளியின்பெருமைதன்னைச்
செப்புகிறேன்மகனேண்மணியின்றிறத்தால்மைந்தா
சாற்றுகின்றமையெடுத்துச்சிமிளில்வைத்து
சாதகமாய்மைக்குநிகர்புழுகுஞ்சேரோ. (௱௯௭)

சேரப்பாபுழுகிட்டுமைவிளக்கிச்
செவ்வையாய்ச்சிவயோகத்திருக்கும்போது
நேரப்பாநின்றநிலைதவறாமற்றான்
நேர்மையுடன்மையெடுத்துத்திலர்தம்போட்டு
காரப்பாவஞ்சனுதேவிபாதங்
கருத்துடனேமனதறிவாற்சேர்த்தாயாகில்

உரைப்பாவுள்ளபயிருயிர்களெல்லா
முனதுவசமாகிவுனக்கடிமையாமே (௱௯அ

ஆமப்பாயிடக்கரத்தில்மைப்பொட்டிட்டு
அசையாமற்கூர்ந்துமைமையையன்பாய்ப்பார்த்தால்
போமப்பாவெகுதூரப் ஒளிதான்தோன்றும்
புதுமைவெகுவதிசயங்கள்கண்ணிற்காணுந்
தாமப்பாகண்டதொருவதிசயத்தைத்
தாரணியில்விள்ளாதேதனதாயார்க்கும்
நாமப்பாகண்டபடியின்னதென்று
நாட்டினால்நாய்போலேயலைவார்பாரே. (௱௯௯

பாரப்பாவலக்கரத்தில்மைப்பொட்டிட்டு
பதிவாகக்கீழ்த்திசையைப்பரிவாய்ப்பாரு
நேரப்பாவதுதாழ்ந்துதுலைதான்றோன்று
நிதிகள்பலவதிசயங்கள்நிசமாய்க்காணுந்
தேரப்பாமனந்தேறியகலநில்லு
சிவசிவாசிவயோகத்திறந்தானென்று
உரைப்பாவறியாமல்மைமையை நீயும்
உண்மையுடன்பதனமதாய்வைத்துக்காரே. (௨௱

காரடாமூலமதில்அங்கென்றோதிக்
கைம்முறையாய்ச்சத்திசிவமொன்றாய்ச்சேர்த்து
சேரடாகம்பியுப்புப்பூரங்கொண்டும்
செவ்வையுடன்தூக்குநிகர்சேர்த்துக்கொண்டு
வாரடாகல்வமதில்நன்றாயாட்டி
வழித்துவொருபீங்கானில்வளமாய்ச்சேர்த்து
நேரடாரவிதனிலேகாயப்போடு
நிசமானநந்தியென்றவுப்பதாச்சே. (௨௱௧

நந்தியுப்புக்குரு.

உப்பானநந்தியுப்புப்பலந்தானொன்று
ஒருமையுள்ளவரைப்பொடியும்பலந்தானொன்று
அப்பானபொடியதுவும்பலந்தானொன்று
உருமையுள்ளதாளகமும்பலந்தானொன்று
வைப்பானகாசியிடகட்டிதானும்
மார்க்கமுடன்பலமறைதான்வளமாய்ச்சேர்த்துத்
தப்பாமல்நாகரசமொன்றாய்க்கூட்டித்
தன்மைபெறவொருபலந்தானெடுத்துக்கொள்ளே.

கொள்ளப்பாவாறுவகைச்சரக்கைநன்றாய்க்
குருபானைத்தொழுதுமிகக்கலவத்திட்டு

மெள்ளப்பார்தான்பொடித்துப்பழச்சாற்விட்டு
    மேன்மையெற்மெழுகதுபோலாட்டிமைந்தா
நள்ளப்பாவுருட்டியதைவட்டுபண்ணி
    நலமாகவோடுதனிக்நடுவேவைத்து
செள்ளப்பாசெப்புகலால்நன்றாய்மூடித்
    தீர்க்கமுடன்கொழிமணலையதின்மேற்கொட்டே.

கொட்டுவதுகுருசொன்னவளவாய்க்கொட்டி
    கூர்மையுடனடுப்பேற்றித்தீயைமூட்டித்
திட்டமுடன்தீயெரித்துவருகும்போது
    சிவசிவாபதமென்னவென்பாயாகில்
வட்டமுள்ள்மணல்மேலேகருகிற்றானல்
    மைந்தனேபதஞ்சரியென்றெடுத்துமெள்ள
சட்டமுடனூறவைப்பாய்க்குளிருமட்டுந்
    தண்மையுடன்குளிர்ந்ததின்மேல்தயவாய்க்கேளே. ()

கேளப்பாமணலைமெள்ளவாரிப்பின்பு
    இருபையுள்ளசிண்ணமதைத்திறந்துப்பாரு
வேளப்பாயெரித்தநெற்றிக்கண்ணாலந்த
    விதமானசரக்காறுங்கட்டிப்போகும்
கேளப்பாசொல்லாமல்வைத்துக்கொண்டு
    குருவானதிருவடியைத்தொழுதுபோற்றி
வாளப்பாகுகைதனிலேசெம்புருக்கி
    வரிசையுடனதுக்குவாமருந்துசேரே. (௱௪௫)

## செம்புசுத்தி.

சேர்ப்பதுதான்செம்புருகிநிற்கும்போது
    செவ்வையுடன்மருந்தெடுத்துச்சிறுகவையா
கோர்ப்பதுபோற்கொஞ்சகொஞ்சமாகச்சேர்த்துக்
    குணமாகச்சரியாகச்சேர்த்துக்கிண்டி
வார்ப்பதுதான்பூமியிலேவார்த்தாயாகில்
    மகத்தானசெம்பதுவுஞ்சுத்தியாச்சு
கார்ப்பதுதான்செம்புசுத்திப்பதனம்பண்ணிக்
    கருவானவெள்ளியிலேவைத்துக்கொண்றே. (௱௪௬)

ஒன்றானவெள்ளியிலேபத்துக்கொன்று
    வுருக்குமுகந்தன்னில்நீகொடுத்துப்பாரு
நன்றானமாற்றதுவுமூணவந்தாகி
    நாற்றமுள்ளசெம்புதனிலேமூளையுமாகும்
குன்றுததங்கமதிற்பத்துக்கொன்று
    கொடுத்துருக்கித்தகடடித்துப்புடத்தைப்போடு

நின்றுடும்பரஞ்சோதியானசோதி
நேர்மையுள்ளசோதியடாதங்கத்தானே. (௱௪

லிங்ககுரு.

தானென்றதளவாயாஞ்சாதிலிங்கத்
தன்மையுடனதுவியாஞ்சாற்றக்கேளு
தேனென்மகலவத்திற்பழச்சாற்விட்டுத்
திறமாகவரைத்துநன்றாய்வட்டுபண்ணி
கோனென்றகுருபதத்தைப்போற்றிநன்றாய்
குவலயத்தில்துஷ்டர்களையகலத்தள்ளி
மானென்றமண்மறைவிற்புடத்தைப்போடு
மார்க்கமுடன்சரக்கைந்துங்கட்டிப்போமே.
கட்டிநின்றமருந்திடைக்குச்செம்புருக்கிக்
கைம்முறையாய்மருந்ததனைச்செய்துக்கொண்டு
இட்டமுடன்தண்ணீர்போலுருக்கிச்சாய்த்துச்
செவ்வையுடன்செம்புதனையெடுத்துப்பாரு
சட்டமதாய்ச்செம்பதிவுங்கட்டிப்போகுந்
தன்மையுடன்வெள்ளிதனிற்பத்துக்கொன்று
இட்டமுடன்கொடுத்துருக்கிமாற்றைப்பாரு
என்னசொல்வேன்பதினாறுவயதுதானே.
தானானவேதைமுறைசொன்னமார்க்கந்
தன்மையுள்ளயோகத்துக்குறதியாகுங்
கோனானகுருவருளால்சொன்னதல்லாற்
குறும்பானதிருடனுக்கோசொன்னேனையா
மானானமவுனமுள்ளசிவயோகிக்கு
மனதுரிமையாகவென்றுவாழ்த்தினேன்யான்
தேனானமதியமுர்தங்கொண்டுநல்ல
சிவயோகமார்க்கத்திற்சேர்ந்துநில்லே.

நிஷ்டைமுறை.

நில்லென்றநிலையறிந்துநிஷ்டைகூடி
நிஷ்களமாம்பிர்மமதில்வாசிபூட்டிச்
சொல்லொன்றுந்தவறாமல்மதியைப்பார்த்துத்
துலங்குமதிரவிதனிலேமதியைப்பார்த்துக்
கொல்லென்றரவிதனிலேவுரிமையாகக்
கூறுபஞ்சவக்கினியைக்கொளுத்திப்பாரு
சில்லென்றமதியமுர்தம்வாரியாயுஞ்
சிவசிவாவந்தமுர்தங்கொண்டுதேறே.
தேறுவதால்தேகவச்சிரகாயமாகுஞ்
சித்தாதிசித்தனென்றபேருமாகுன்

கார்புருவக்கருணைவிழிக்கமலமீதிற்
கருவானபருதிமதிச்சுட்ருக்கப்பால்
பார்புனலாம்நெருப்பாறக்கப்பால்நாதம்
பதிவானநாதமதைப்பார்க்கவேண்டிக்
கூறமுதமதிபெருகுநாதத்தோடே
கொண்டுசேடம்நின்றநிலைகூர்ந்துபாரே. (௱௫உ)

சந்திரசூரியன்.

கூர்ந்துபார்சூரியனோசத்திசத்தி
கொழுகிநின்றசந்திரனோசிவமதாகும்
தேர்ந்துபாரிவர்களிடநிதானங்கேளு
சிவப்பானசூரியகலைபனிரெண்டாகும்
ஆர்ந்துபார்சந்திரகலைபதினாறாகும்
அதிகமுள்ளசந்திரனும்வாண்மைமிஞ்சிச்
சேர்ந்துசுடர்சத்திகலைபனிரண்டோடே
சிவசிவாசிவகலையுஞ்சேர்ந்தவாறே. (௱௫௩)

சேர்ந்துமிச்சம்நாலுகலைபூரணமாய்நின்று
செவ்வையுடனுவிலொன்று அம்பரத்தின்பதியாய்
நேர்ந்துமிகப்போனதின்பின்மூன்றுகலைதானும்
நெடுவானில்விந்துவெனவிளம்பிறையுமாகக்
கூர்ந்துபார்சத்தியிடத்திருவாசியாகிக்
கொழுகிநின்றசதுர்தேசியாகிப்பின்னும்
ஆர்ந்துநின்றவமாவாசைப்பருவமாகி
யத்தமொன்றுமிதுமூன்றுமொன்றாய்ப்போச்சே. ()

ஒன்றாகச்சதுர்த்தியிலேவளர்பிறையாய்நின்று
யுகமுடிந்துவளர்ந்துதடாபதினாறாகக்
கண்டாயோமதிநிறைந்துகுறைந்தசெய்தி
கருவாகவுனதிடத்தில்காட்டிவைப்போம்
பண்டானவகாரமடாவிந்துவிந்து
பதிவானவுகாரமடாசத்திசத்தி
நின்றும்மகாரமடாசுழினைக்கம்பம்
நேர்மையுடனிதுமூன்றந்தேகமாச்சே. (௱௫௫)

தேகமென்றால்வெகுதூரம்நினைக்கவேண்டாம்
சேர்ந்துநின்றவாதபித்தஞ்சிலேற்பமாகும்
ஆகமுடனதுமூன்றுமிடைபின்னாக
வமர்ந்துநின்றசுழிமுனையாய்நின்றவாறும்
பாகமென்றசூரியன்றன்வாதமாச்சு
பதிவானசந்திரன்றன்பித்தமாச்சு.

தாகமுடன்சேத்துமந்தான்சுழியாய்நின்று
சகலசெந்துமூன்றினால்மடிந்தவாறே. (௱ரு
மடித்தவகைக்யேதெனவேயென்பாயாகில்
மக்களேயவனவன்செய்மார்க்கத்தாலே
முடிந்தவகைநன்மார்க்கம்விட்டகுறைமார்க்க
மூர்க்கமுள்ளதுன்மார்க்கத்தாலேமைந்தா
கடிந்துநின்றயிடையானபித்தமீறிக்
கபாலமென்றசுழினையிலேகூடுதாக்கிச்
சொடிந்துவந்தவாசமதைத்துஞ்சப்பண்ணி
தொல்லுலகிற்பிறந்திறந்துபோவார்காணே. (௱
பிறந்திறந்துபோகாதநெறியைச்சொல்வேன்
பெருமைவிட்டுவுரிமையிலேயிலமாய்நின்று
கறந்துநின்றவகாரமடாவிந்துவிந்து
கருவானவிந்துவடாமதியுமாச்சு
சிறந்துநின்றமதியமெல்லவுகாரமான
தேகமென்றசூரியனிற்சேர்ந்துகொண்டு
மறந்துவிடாதேமகனேமகாரமான
மகத்தானபராபரத்தில்மகிழ்ந்துநில்லே.

இராப்பகல்.

நில்லென்றநிலையறிந்துநிலையில்நின்று
நிலையில்லாச்சந்திரனைநிலையிற்சேரச்
சொல்லொன்றுந்தவறாதசொர்க்கமாகுஞ்
சோர்வானநாதமதுவென்னவென்றால்
உல்லென்றரவிதானேசொர்க்கஞ்சொர்க்கம்
ஊன்றிநின்றசந்திரன்றானாதமாச்சு
செல்லென்றரவிமதிதானேதோவென்றால்
சேர்ந்துநின்றராப்பகலாய்நின்றவாறே.
வாறானராப்பகல்தானென்சொலென்றால்
மக்களேவெளிதோன்றச்சொல்வேன்கேளு
காறானராவதுதான்கண்மூடலப்பா
கருவானபகலதுதான்பார்வைமைந்தா
கூறாகொண்டுமொன்றாய்ச்சேர்த்துக்கொண்டு
குருவானபதிதலத்திற்கூட்டிமேலை
நேராகநின்றுதவயோகஞ்செய்தால்
நிலையானசிவயோகமிதுதான்பாரே.

நாதவிந்துமெழுகு.

பார்க்கையிலேமூலமதிலக்கினியுண்டாகப்
பதிவானகர்ப்பமொன்றுசொல்லக்கேளு

சேர்க்கையுடன் அகாரமுடன் உகாரம்ரெண்டுஞ்
செவ்வையுடன்ரெண்டுமொன்றாய்ச்சேர்த்துக்கொண்டு
ஆர்க்குமிது தெரியாமல்ரவியில்வைக்க
அப்பனேநாதவிந்துவொன்றாய்ச்சேர்த்து
மார்க்கமுள்ளமெழுகாகுமைந்தாவமந்தா
மனமகிழ்ந்துபணவிடைதான்மகிழ்ந்துகொள்ளே. ()
கொள்ளயிலேசந்திரன்றான்தேய்ந்துத்தேய்ந்து
கூர்மையுடன்ரவிதானும்பிரகாசமாகி
சுள்ளையிலேயகப்பட்டபாண்டம்போலே
சுகமானதத்துவங்கள்செந்நீப்பட்டு
தொல்லையென்றசூழ்வினைகளகன்றுபோகுந்
துருவமென்றவத்துருவந்துலக்கமாகும்
பிள்ளையிலேவுங்களைப்போற்பிள்ளையுண்டோ
பின்னைரவியினிடபலத்தைப்பாரே. (௱௬௨)
பிலமானகாயாதிகர்ப்பங்கொண்டு
பேணியேயில்லிடத்தைப்பிலக்கப்பண்ணி
குலமானமூலமுதலாறுதாரங்
கூட்டிநின்றநவக்கிரகமொன்பதிற்கும்
திலமாகவநுக்கிரகமார்தான்காண்பார்
நீள்திசையில்சற்குருவைத்தேடிநின்று
நலமாகநாலஞ்சுவீட்டுக்கெல்லாம்
நடுவீடாய்நின்றவநுக்கிரகந்தானே. (௱௬௩)
தானென்றவநுக்கிரகஞ்சுத்தப்பாழாய்த்
தவறுதபாழ்வீட்டையென்னசொல்வேன்
கோனென்றகுருவருளால்வீட்டைநம்பிக்
கோடானகோடிசித்தர்தவமேசெய்தார்
ஏனென்றலவவீட்டிற்குறிதானென்று
மென்னவென்றால்துண்டாததீபந்தியம்
வானென்றவத்தீபம்பார்க்கவேண்டி
மகத்தானசத்திசிவபூசைசெய்யே. (௱௬௪)
பூசையென்றசிவபூஜைசத்திபூசை
புருஷிமுடன்செய்வதற்குயோகத்தங்கு
நேசமுடனப்பூசைமனதிலெண்ணி
நிச்சயமாய்க்குருவருளைநேர்ந்துக்கொண்டு
ஆசையென்றபலருசியையகலத்தள்ளி
யருந்துருசிதனையறிந்துமருந்துவோர்க்கு
மாசியென்றமயக்கமறுமன்மேதங்கு
மகத்தானவாசியில்சென்றேறுவானே. (௱௬௫)

ஏறுவான் வாசியிற்சென்றேறியந்த
 யிருட்டான பதிகடந்துவெளியிற்சென்று
தேறுவான்மனந்தேறியமுர்தங்கொண்டு
 சிந்தைமனதொன்றாகித்தீபம்நோக்கிக்
கூறுவான் தூரதிஷ்டி நடத்தையெல்லாங்
 குருவானபராபரத்தின்குறிப்பினாலே
ஆறுவான்வக்கிரகமருளைப்பெற்று
 அன்பானவநுக்கிரகமாகிதானே. (௱௬

ஆதியென்றவநுக்கிரகம்பிர்மபீடம்
 அப்பனேசுழிமுனையாய்நின்றபீடம்
சோதியென்றசுடர்வடிவாயிருந்தபீடந்
 துடர்ந்துநின்றசீடனுக்குக்குருவானபீடம்
வாதியென்றவந்தகிரிதீபபீடம்
 மனோன்மணியாள்சென்றுவிளையாடுபீடம்
கோதிலாச்சுத்தமயமானபீடங்
 கூர்மையுள்ளபீடமடாநந்திதானே. (௱௭

நந்தியொளிகண்டவர்தான்ஞானயோகி
 நலமானசிவயோகிபிர்மயோகி
அந்தமுள்ளவஷ்டாங்கமானயோகி
 யருவுருவாய்நின்றதொருபரமயோகி
பந்தமுள்ளவாசிநிலையறிந்தயோகி
 பதிவானகாயாதிகற்பயோகி
செந்தருவரானகேசரத்தில்வாழும்
 செவுனமென்றசெவுனதியோகிதானே. (௱

தானென்றயோகத்துக்குறுதியென்ன
 தன்மையுள்ளவாசியென்றமூலமூலஞ்
சோனென்றகுருவருளால்வாசிமூலக்
 குறிப்பறிந்துகொள்ளுவதுமென்னவென்றால்
நானென்றவாணவத்தைநலமாய்த்தள்ளி
 நடுவானபூரணத்தைப்பற்றிக்கொண்டு
மானென்றபிரணவத்துள்மனதைவைத்து
 மகத்தானகேசரியைத்தொழுதுநில்லே.
தொழுதமுறைநயென்னவென்றாலகாரநிட்டை
 சுருக்கமுள்ளவுகாரமடாசத்திபூசை
பழுதொன்றுநினையாமலிரண்டுமொன்றாய்ப்
 பக்குவமாய்த்தான்செபித்துப்பதியில்நின்று
தெளிதமுள்ளமனதுறுதியாகவந்த
 ரேசகமும்பூரகமும்நேரேசெய்து

முளிதமர்க்குள்நிறுத்திக்கும்பகத்தில்நின்று
முனையானதீபமதைத்தூண்டிப்பாரே. (௱௭௰)

லிங்கத்தாரகுரு.

தூண்டிமிகப்பார்க்கையிலேசோதிகாணுந்
துவாதிசாந்தத்தில்மனதுறுதியாகும்
தாண்டிமிகப்போகாமல்நிவில்நின்றால்
சகலகலைக்கியானமெல்லாந்தானேதாணுப்
வேண்டியதோர்கருமானமின்னமொன்று
வெகுதெளிவாய்ச்சொல்லுகிறேன்மெய்யதாக
பூண்டமனதுறுதியினாலிங்கந்தாரம்
புகழானவிந்துவுடன்கெந்திபூட்டே. (௱௭௧)

பூட்டப்பாகெந்தியுடன்துருசுதானும்
பொருந்தவசுமோரிடையாய்நிறுத்துக்கொண்டு
தாட்டப்பாவதற்கிடைதாணுதிசேர்த்து
நன்றானபழச்சாற்றால்கலவத்தாட்டு
ஆட்டப்பாயீராறுசாமமாட்டி
அரகராவழித்துருட்டிவட்டுப்பண்ணி
மூட்டப்பாசட்டிதனில்வைத்துமூடி
மூடுவதுமணற்கொட்டியெரித்திடாயே (௱௭௨)

எரித்துமணல்கருகுமப்போயிறக்கிவைத்து
இதமாகவாறினபின்திறந்துபாரு
குறித்தசரக்காறுமொன்றாய்க்கட்டிப்போகுங்
குருவாகமனந்தனிலேகூர்ந்துகொண்டு
வருத்தமிட்டுச்செம்புருக்கியதற்குநேராய்
மார்க்கமுடன்மருந்திவாய்கிண்டிக்கிண்டித்
திருத்தமுடன்மருந்தீய்ந்துநன்றாவூதிச்
செம்புகளிம்பானதுவுங்கட்டிப்போச்சே. (௱௭௩)

கட்டிநின்றசெம்பதனைப்பதனம்பண்ணிக்
கருவாகவிடைக்கிடையேதங்கஞ்சேர்த்து
திட்டமுடன்வெள்ளிதனிற்பத்துக்கொன்று
செவ்வையுடன்றானுருக்கியெடுத்துப்பாரு
வட்டமிட்டரவியொளியையென்னசொல்வேன்
மாற்கமுடனவ்வொளியைக்கண்டுநீயுந்
துட்டருடன்கூடாமல்விண்ணைநோக்கித்
துவாதசாந்தத்தில்மனந்துலங்கிநில்லே. (௱௭௪)

நில்லென்றநிலையறிந்துமனதுபூண்டு
நிலையானமூலமுதலாறுதாரம்

உள்ளென்றவுள்மூலமேலாதாரம்
ஓங்கிநின்றதத்துவமாந்தொண்ணூற்றாறுந்
தள்ளந்தப்பதிதனிலேநிறுத்தியந்தத்
தள்ளாலேயாகுதியாய்ச்சாம்பலாக்கிக்
கொள்ளுகிறவிதமென்னவுத்தளமாய்ப்பூசிக்
குண்டலியினந்தியொளிகூர்ந்துபாரே. (௱௭௫

ஞானம்.

பாரப்பாரவிமதியுமொன்றாய்க்கூட்டிப்
பருவமுடன்புருவநடுப்பதிக்கப்பாலே
நேரப்பாவதனிலொருகமலந்தோற்றும்
நின்றிலங்குங்கமலமதைநேரேபார்த்தால்
ஆரப்பாவறிவார்கள்ஞானதீபம்
அரகராசிவயோகமானதீபம்
மேரப்பாமெய்ஞ்ஞானதீபந்தன்னை
மெய்யாகக்கண்டுசிவயோகம்பாரே. (௱௭௬

பாரப்பாமனதுகொண்டுஅறிவிற்சென்று
பரிவானமூலமடாமூலாதாரம்
நேரப்பாநின்றதொருவாறாதாரம்
நிலையானநடுமையமேலாதாரம்
வீரப்பாகொண்டவரிதாரந்தாரம்
மெய்யானதாரமடாவிஞ்சைவிஞ்சை
கூரப்பாகுருவானவிஞ்சைமூலங்
கூர்மையுடனம்மூலங்குறியாய்க்காணே. (௱௭

குறியாகக்கண்டந்தக்குறியில்நின்று
கூர்மையுள்ளதாரமதையெடுத்துமைந்தா
சரியாகத்தானுருக்கிப்பாண்டத்திட்டுச்
சளியாதகாடியதிலிட்டுநன்றாய்
நெறியானமஞ்சளொடுவுப்புநேராய்
நினைவாகத்தானூட்டியதற்குட்சேர்த்து
தெரிவாகக்கிண்டிநன்றாய்ப்பிசறிகொண்டு
தீயெரித்துவடுப்பேற்றியெரித்திடாயே. (௱

எரித்தபதமாவுகண்டாலிறக்கிமைந்தா
வின்பமுடன்குளிரவைத்துயறுநாள்தானும்
திருத்தமுடன்முன்போலேபத்துமுறைசெய்தால்
சிவசிவாதாரமதிற்கசப்புநீங்கும்
வருத்தமென்றுநினையாமல்ரவியிற்போட்டு
மார்க்கமுடன்தானுணர்ந்துசுக்குலம்போல்

கருத்துடனேதானுணர்த்தியெடுத்துநல்ல
கல்லுறலில்மாவாகவிடித்திடாயே. (௱எகூ)

இடித்திடுவாய்ச்சமூலமதைபொடியதாக்கி
இன்பமுடன்முன்போலேபாண்டத்திட்டு
வடித்தவொருமாவதற்குவரைதான்பூர
மாட்டிநன்றாயொன்றாக்கிமைந்தாமைந்தா
தொடுத்தவொருபாண்டமதைமூடிமைந்தா
சுகமாகமண்டலந்தான்சமாதிவைத்து
நடுத்தரமாய்மனதுறுதியாகக்கொண்டு
நடுவானபூரணத்தைத்தொழுதிடாயே. (௱அய)

தொழுதிடுவாய்முந்திமுந்திக்குருவைத்தானுந்
தொழுதபின்புஅகாரமென்றசிலைத்தைப்பூசிப்
பழுதொன்றுநினையாமல்சத்திதன்னைப்
பாலகனேமனதுறுதியாலேபூசி
தெளிந்துள்ளமனதாலேபூசைபண்ணி
நீமகனேகுருபூசைநன்றாய்ச்செய்து
விழிதவறாதேயிருந்துசமாதிசென்று
மார்க்கமுடனக்கடத்தையெடுத்திடாயே. (௱அக)

எடுத்தவொருபாண்டமதைமைந்தாநீயும்
எழெட்டுநாள்வரைக்கும்ரவியிற்போடு
தொடுத்தவொருமேற்கவசந்தள்ளிநீயும்
சுகமாகவரிதாரக்கடுகைமைந்தா
விடுத்ததைநீயிங்கான்றன்றாளிசேர்த்து
மெய்யாகவைத்ததைநீபூசைபண்ணு
அடுத்தவொருபூசையென்னவென்றால்மைந்தா
வாரியென்றநவகோணமிட்டிடப்பாரே. (௱அஉ)

பாரப்பாநவகோணமிட்டுக்கொண்டு
பரமானமேருவதைநடுவேவைத்து
சாரப்பாசுகந்தமலர்போற்பதத்தால்
கணிவாகவர்ச்சனைகள்கருத்தாய்ச்செய்து
தேரப்பாவயிரவர்க்குவடமாலைசாற்றிச்
சிலசிவாதிபமொடுதூபங்காட்டி
நேரப்பாநின்றபாரமேருதன்னில்
நிலையானவமுதரசக்கடுகுவாங்கே. (௱அங)

வாங்கிடுவாய்க்கடுகில்நல்லகசடுதபோலே
மைந்தனேதானெடுத்துநாவுதன்னில்

பாங்குபெறவைத்ததின்மேலங்கென்றேதான்
    பதிவாகக்கண்டமதிலங்கென்றானு
சாங்கமுடனமுதரசந்தானைபொங்குந்
    தன்மையுடன்தான்புசித்துத்தனதாய்மைந்தா
ஆங்கதிகொண்டறுஇனமும்வாசிநோக்கு
    அருளானவாசியினூற்றீபநோக்கே. (௱அ

பூரணலேகியம்.

நோக்குவதற்கின்னமொருவுறுதிகேளு
    நுண்மையுள்ளபூரணலேகியந்தான்மைந்தா
வாக்குமனதுறுதியடாமகத்தாம்போத
    மனதுநெறியறிவானவாமபோதம்
வர்க்கையுள்ளபோதமதையென்னசொல்வேன்
    ஏகாந்தலேகியத்தினியல்புகேளே
சேர்க்கையுள்ளசெங்கமலத்தமுர்தம்வாங்கிச்
    சிவசிவாபீங்கானிற்சேர்த்துக்கொள்ளே. (௱அ

சேர்த்ததொருபூரணத்திற்பூரஞ்சேர்த்துச்
    சிவசிவாமிடைசரியாய்ச்சேர்த்துமைந்தா
பார்த்திபனேரெண்டுமொன்றாய்ச்சேர்த்துக்கொண்டு
    பதிவாகரவிதனிலேவைத்துக்காரு
பூர்த்தமலரமுதரசம்பூரம்ரெண்டும்
    பொருந்தியொன்றாய்க்கட்டியதுபுட்டுப்போலாம்
கார்த்திருந்துரவிதனிலேநவநாள்போடு
    காரணமாயந்திடைக்குப்பூரஞ்சேரே. (௱அ

பூரமதற்கிடைசரியாய்ச்சேர்த்துக்கொண்டு
    புத்தியுடன்கலவமதில்நன்றாயாட்டிக்
காரமென்றலேகியத்தையுருட்டிமைந்தா
    கனமானபீங்கான்றன்மேருக்கேற்றி
வீரமென்றபூரணமேயென்றுபோற்றி
    விபரமுடனவகோணம்நடுவில்வைத்து
சாரமுடன்சர்க்குருவைத்தியானம்பண்ணிச்
    சமரசமாய்க்கடுகளவுயெடுத்திடாயே. (௱

எடுத்துநடுப்பூரணத்தைத்தொழுதுமைந்தா
    யிதமாகமண்டலமேகொண்டாயானால்
அடுத்தமனையாறுமடாவலுத்துப்போகும்
    அசைவானவாசியதுவமர்ந்துநிற்கும்
தொடுத்தொருதேகமடாவச்சிரகாயஞ்
    சுந்தரப்போல்மன்மதனாய்த்துலங்குவாய்நீ

நடுத்தரமாய்ப்பூரணத்திலிருந்துகொண்டு
நாதாந்தச்சிவயோகம்நண்ணுவாயே. (௱அஅ)

நண்ணுவதுபூரணத்தைநம்பவேண்டும்
நாதாந்தப்பேரொளியைநாடவேண்டும்
உண்ணுவதுசத்திசிவபூசைவேண்டும்
ஒடுக்கமந்தநிலைதனிலேயுறுதிவேண்டும்
எண்ணுமந்தப்படியாகயிருக்கவேண்டும்
ஏகாந்தச்சிவயோகவியல்புவேண்டும்
விண்ணதனைமெய்யாகநம்பிக்கொண்டு
மேலானசிவயோகம்விரும்பிநில்லே. (௱அகூ)

முப்பூசுன்னம்.

நில்லந்தநிலைதனிலேநிலைத்தால்மைந்தா
நீடூழிகாலமடாநிலைக்குந்தேகம்
கல்லென்றகல்லுதனைக்கருத்தாய்நீயும்
கருவானவுப்பதனைவாங்கிமைந்தா
உள்ளொன்றவக்கினியிற்சுத்திபண்ணி
ஓர்நிறையாய்வெடிசீனம்நன்றாய்ச்சேர்த்துச்
செல்லென்றதன்னீராலரைத்துமைந்தா
திறமாகவரைத்ததனைவட்டுப்பண்ணே. (௱கூ௰)

பண்ணியந்தவட்டதற்குக்கவசம்பண்ணி
பரவாகரவியிலிட்டுப்புடத்திற்போடு
தண்மையாய்ப்புடமாறியெடுத்தபின்பு
தனதாகவஞ்சுமுறைமுன்போற்செய்தால்
உன்னியதோர்காரமதையென்னசொல்வேன்
வுகமையில்லாச்சுன்னமடாவேகமெத்த
விண்ணிறைந்தசுன்னமடாவேகமெத்த
வேதாந்தசிவயோகம்விளங்குந்தானே. (௱கூக)

தானானசுன்னமதில்வேதைகோடி
தயங்காதபற்பமடாகோடிகோடி
பூணுதக்கட்டினமுமுறக்கினங்கோடி
பூரணமாய்ச்செயநீரின்புதுமைகோடி
கோணுனதுருமுறைகள்கோடாகோடி
கூறுகிறகர்ப்பமுறைகுணமோகோடி
ஊனுனதேகமதிற்சுன்னஞ்சேர்க்க
ஓடுங்குமின்றமாய்கையெல்லாமோடிப்போச்சே (௱கூஉ)

போச்சென்றுவிடுகாதேகாரச்சிப்பி
புதுமையுடன்சொல்லுகிறேன்குப்பிடானே

உ

சிவமயம்.

# இராமதேவர்சிவயோக அட்டவணை.



---

இராமதேவர்சிவயோகம்

அட்டவணை

முற்றிற்று.